# வைதிக தர்ம வர்த்தனி



ஸ்ரீ உமாபதி

மலர் 12 ] விளம்பிஸூ மாசிமீ. [ இதழ் 5.

ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

---

## விளம்பிஞூ மாசிமீ சிசிரருது. உத்தராயணம்.

| தமி. | இங்கிலீஷ் (பிப்ரவரிமீ / மார்ச்சு மீ 1959) | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ப்ரா. திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வெள். | ஷஷ்ட். | 60-0 | அசு. | 60-0 | அ. | ஷஷ்ட் |
| 2 | 14 | சனி. | ,, | 5-38 | ,, | 5-10 | சி. | ஸப். |
| 3 | 15 | ஞா. | ஸப். | 12-20 | பர. | 12-57 | சி. | அஷ்ட் |
| 4 | 16 | திங். | அஷ்ட். | 18-38 | க்ருத் | 20-20 | ம. அ. | — |
| 5 | 17 | செ. | நவ. | 23-50 | ரோ. | 26-40 | அ. சி. | நவ. |
| 6 | 18 | புதன். | தச. | 27-32 | மிருக. | 31-35 | சி. | தச. |
| 7 | 19 | வியா. | ஏகா. | 29-25 | திரு. | 34-42 | ம. அ. | ஏகா. |
| 8 | 20 | வெள். | த்வா. | 29-25 | புன. | 36-2 | சி. | த்வா |
| 9 | 21 | சனி. | த்ர. | 27-38 | பூச. | 35-38 | சி. ம. | த்ர. |
| 10 | 22 | ஞா. ○ | சதுர். | 24-17 | ஆயி. | 33-45 | சி. ம. | சசி. |
| 11 | 23 | திங். | பௌ. | 19-38 | மக. | 30-38 | ம. சி. | ப. ப். |
| 12 | 24 | செவ். | ப்ர. | 14-0 | பூர. | 26-40 | சி. அ. | த்வி. |
| 13 | 25 | புத. | த்வி. | 7-50 | உத். | 22-10 | அ. சி. | த்ரி. |
| 14 | 26 | வியா. | த்ரி. | 1-18 | ஹஸ். | 17-25 | சி. | சது. |
| | | | சது. | 54-45 | | | | |
| 15 | 27 | வெள். | பஞ். | 48-27 | சித். | 12-47 | சி. | பஞ். |
| 16 | 28 | சனி | ஷஷ்ட். | 42-35 | சுவா. | 8-25 | அ. சி. | ஷஷ்ட் |
| 17 | 1 | ஞா. | ஸப். | 37-12 | விசா. | 4-30 | ம. | சப். |
| 18 | 2 | திங். | அஷ்ட். | 32-30 | அனு. | 1-10 | சி. | அஷ்ட் |
| | | | | | கேட். | 58-32 | | |
| 19 | 3 | செவ் | நவ. | 28-32 | மூலம். | 56-38 | அ. சி. | நவ. |
| 20 | 4 | புதன் | தச. | 25-27 | பூரா. | 55-38 | அ. | தச. |
| 21 | 5 | வியா. | ஏகா. | 23-10 | உத்தி. | 55-30 | சி. | ஏகா. |
| 22 | 6 | வெள். | த்வா. | 21-55 | சிர. | 56-25 | ம. சி. | த்வா. |
| 23 | 7 | சனி | த்ர. | 21-42 | அவி. | 58-22 | சி. அ. | த்ர. |
| 24 | 8 | ஞா. | சசி. | 22-40 | சத. | 60-0 | சி. | சது. |
| 25 | 9 | திங். ● | அமா. | 24-50 | ,, | 1-32 | சி. ம. | அமா |
| 26 | 10 | செவ். | ப்ர. | 28-12 | பூரட். | 5-52 | ம. அ. | ப்ர. |
| 27 | 11 | புதன் | த்வி. | 32-47 | உத்தி. | 11-22 | சி. | த்வி. |
| 28 | 12 | வியா. | த்ரி. | 38-23 | ரேவ. | 17-52 | சி. அ. | த்ரி. |
| 29 | 13 | வெள். | சது. | 44-43 | அசு. | 25-12 | அ. சி. | சது. |
| 30 | 14 | சனி | பஞ். | 51-22 | பர. | 33-0 | சி. அ. | பஞ். |

3௳ ரதஸப்தமி, கிருத்திகை, 7௳, 21௳ ஏகாதசி.
8, 22௳ ப்ரதோஷம், 23௳ மஹா சிவராத்ரி, 25௳ அமாவாஸை.

**யஜமானன் என்றால் யாகம் செய்பவன்.**

# வைதிக தர்ம வர்த்தனீ.



விளம்பிஹு மாசிமீ.

மலர் 12] [இதழ் 5.

தனிப்ரதி அணா 7.

வருஷசந்தா ரூ. 5.

கார்யாலயம்: கடவாசல்,
வடகால் P.O. (Via.) சீர்காழி
(தஞ்சை ஜில்லா.)

## பொருளடக்கம்.



## நவரஸப் பகுதி.

**அவர்நாண நந்நயம் செய்!** ப்ரவாஹத்தில் அகபட்டுக்கொண்டது ஒருதேள். அதன் ஸ்வபாவம் தெரிந்தும் ஒருவர் நீருடன் அதை கையில் ஏந்தி கரையில் விட்டார். அது அவர் கையில் கொட்டிற்று. நீர்ப் பெருக்கு அதிகமாகி மறுபடியும் அதை பிரவாஹம்அடித்துச் சென்றது. மறு முறையும் அவர் தேளை நீருடன் கரையில் எடுத்துவிட்டார். மறு முறையும் அது கொட்டிற்று பாவம்!

அருகிலிருந்தவர், ஐயா! துஷ்டனுக்குதவலாமா? என, அது அதன் வேலையைச் செய்தது! நான் என் கடமையைச் செய்தேன்! என்றார் உத்தமர். **தீங்கு இழைத்தவர்க்கும் நன்மைசெய்.**

**திறமையான பதில்:** சென்னையில் எல்லாவகையிலும் உலகம்போற்றும் V. கிருஷ்ணஸ்வாமி அய்யரை, தமிழ் நன்கு கற்ற ஒரு வெள்ளையர் "சாதம் கீதம்," "மாடு கீடு" என எல்லாவற்றிற்கும் 'கீ' என சேர்த்துக் கொள்வது ஏன்? என்று கேட்டார். இதற்கு யார் எப்படி பதில் கூறுவது? சாதம்போல் சற்றேறக் குறைய அதற்கு சமமாக உள்ளது என்று பொருள் என எல்லோரும் வியக்கும்படி கூறினர்.

**காம்யத்தில் ஆசையை விடு:** என்பது ஸோபாந பஞ்சகத்தில் ஆதி குரு கூறியது. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அறுபதாம் ஆண்டு விழாவைக் கொண்டாட பக்தர் அவா கொண்டனர். ஸ்ரீ குரு அதற்கு இடமளிக்கவில்லை. 'என்னிடம் பெரியவாளுக்கு அன்புண்டு, என் சொல்லைத் தட்டமாட்டார்!' என ஒரு பக்தர் பிரார்த்தித்தார். அதுஸமயம் மௌநம். முகூர்த்த மேளம் அடிப்பது போலும், தாலி முடிவதுபோலும் ஜாடைகாட்டி, அறுபதாம் கல்யாணத்திற்கு யாருக்குத் தாலி கட்டுவது? எனக் கேட்க, பக்தர் வெட்கி சிரித்து தலைகுனிந்தார். அச்சமயம் பக்தர் அளித்த 100 ஏக்கரா பூமி ஷஷ்டி பூர்த்தி ட்ரஸ்ட் என்ற வேத சாஸ்திர விருத்திக்குப் பயன் படுகிறது.

**பத்நீ எனில் யாகத்தில் ஈடுபட்டவள்.**

## ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் அரிய உபதேசம்.

தற்கால கல்வியையும் ஸமூஹத்தையும் காணும்பொழுது வருங்காலத்தில் நமது மதப் பற்றிருக்குமா? என ஸந்தேஹம் உண்டாகிறது. நாஸ்திக ப்ரசாரம் மாணவர் மனதைக் கெடுக்கின்றது. கிருஸ்தவர், கிருஸ்தமஸ் கொண்டாடுகின்றனர். ஞாயர் தோறும் சர்ச் செல்கின்றனர். அங்ஙனமே மஹம்மதியர், வெள்ளி தோறும் மசூதிக்குச் செல்கின்றனர். ஹிந்து மாணவர் தவறாமல் ஸினிமா செல்கின்றனர். நம் மதமே அறியாமல் வளர்கின்றனர். இத்தகையவரே ஜாதிச் சண்டை, மதச்சண்டை, பாஷை சண்டையில் ஈடுபடுவர்.

இளமையிலேயே பக்திப்பாட்டுகளைக் கற்பிப்பது நம் கடமை. திருவோணம், திருஆதரை என்ற இருநக்ஷத்ரங்களுக்கே 'திரு' சேர்க்கப்படும். இரண்டும் ஹரிஹரர்க்கு ஏற்றவை. இரு மூர்த்திகளுக்கும் மார்கழிமாதம் ஏற்றது. இதில் திருப்பாவை திருவெம்பாவை திருப்பள்ளி எழுச்சிகளைக் காலையில் படிக்கும்படிச் செய்ய வேண்டும். இதில் பரீக்ஷைவைத்து தேறியவர்க்குத் தங்கக்காசு வெள்ளிக்காசு பரிசு தரவேண்டும். அர்த்தமும் கூறுபவர்க்கு அதிக பரிசு அளிக்கவேண்டும். ஒவ்வொரு ஊரிலும் இது நடக்க வேண்டும். ஷை நூல்களை அச்சிட்டு வழங்கவேண்டும்.

நிலமுள்ளோர் தங்கள் நிலத்தில் ஒருபாகம் இந்த தர்மத்திற்கு தானமாக எழுதி வைக்கவேண்டும். இந்த பூதானம் செய்ய இதுவே நல்ல சமயம். ஒருவர் இவ்வளவுதான் பூமி வைத்துக்கொள்ளலாம் எனச் சட்டம் வரப்போகிறது. நல்லவிஷயத்திற்குப் பூதானம் செய்தால் ஈச்வரன் அருளுக்குப் பாத்ரமாகலாம்.

## ஸ்ரீ ச்ருங்கேரி ஜகத்குருவின் அரிய உபதேசம்.

ஈரோட்டிலே ஸ்ரீமத் ஆசார்யாள் விஜயம்செய்து அரிய உபதேசம் செய்தார்கள். நாம் கண்ணால் காணும் ஒவ்வொரு பொருளும் ஒவ்வொருவரால் செய்யப்பட்டது. விசாலமான உலகை உண்டுபண்ணியவர் ஒருவர் இருக்கவேண்டுமல்லவா? அவரே பரமாத்மா! ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையான துன்பம் இருக்கிறது. ஆத்யாத்மிகம் ஆதிதெய்விகம் ஆதி பௌதிகம் எனப் பொதுவாகக் கூறப்படும்.

சிலவை சிகித்ஸையால் சிறிதுகாலம் சாந்தமாகும். இந்த துன்பம் அகல வழி தெரியாமல் தவிக்கிறோம். ஏழ்மையால் வருந்துகிறோம். நம் வீட்டில் ஒரு புதையல் புதைந்து கிடக்கிறது.

---

**க்ருஹபதி எனில் யார்? அக்நியேயாம்.**

அது நமக்குத் தெரியவில்லை. ஒரு வித்த புருஷன் அதைக் காட்டினால் அதை எடுத்து ஏழ்மையை அகற்றிக்கொள்கிறோம். அதேபோல் நமது துக்கத்தை நீக்க சாஸ்திரங்கள் வழி காட்டுகின்றன. அது, எப்போதும் எந்த துன்பமும் வராமலிருக்கவும், பேரானந்தம் பெறவும் வழி காட்டுகிறது.

அது அபராவித்யா பராவித்யா என இருவகை. புராணம் ஜோதிஷம் வைத்யம் கணிதம் முதலியவை அபரா. அழியாத ஆத்மாநந்தத்தை அளிப்பது பராவித்யா. யானை மனிதனைவிடப் பெரியது. தேனீ நரனைவிடச் சிறப்பாகக் கூடு கட்டுகிறது. அவை ஆத்மவிஷயத்தில் முன்னேறவில்லை. ஆறறிவு படைத்த மனிதன் நல்ல சாஸ்த்ரங்களைக்கொண்டு துன்பமகற்றிப் பேரின்பம் பெறவேண்டும்!

---

## மாசிமாஸ விசேஷம்.

**மாக ஸ்நாநம்:** ஸௌரமான ரீதியாக 30 நாளும் கொஞ்சம் சூர்யன் உதயமாகும்போது ஸ்னானம்செய்து முடிவில் கம்பளதானம் செய்தால் ஸகல பாபங்களும் அகலும்.

**3உ ரத ஸப்தமி:** ஏழு எருக்கிலை, அக்ஷதை, கோமயம்இவைகளை வைத்து ஸப்த ஸப்தி ப்ரியே தேவி என்ற சுலோகத்தைக் கூறி ஸ்னானம் செய்தால் ஏழு ஜன்ம பாபமகலும். [எருக்க இலை ஸ்னானம்செய்ய ச்லோகம் ஸ்துதி குஸுமாஞ்சலி என்ற நூலில் உள்ளது. 45 ந. பைசா ஸ்டாம்பு அனுப்பி மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.]

**11உ ஆகாமாவை:** காலையில் சந்த்ரனுள்ளபோது ஸ்னானம் செய்தால் பாபமகலும்.

**23உ மஹா சிவராத்ரி:** சுத்த உபவாஸமிருந்து இரவு நாலு காலை பூஜை தர்சனம்செய்தால் மஹாபாபங்களகலும். 1008 ஏகாதசி பலனைத் தரும். [சிவராத்ரி பூஜை, கதை புஸ்தகம் 33 ந.பை. ஸ்டாம்பு அனுப்பி மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.]

---

**ஸ்ரீ ஜகத்குரு விஜயம்:** கிருஷ்ணபுரத்தில் நமது ஆசிரியர் 18 புராணம் கூறும் ஸபைக்கு விஜயம்செய்து, மநது சுத்தமாக பஜனை ச்ரவணம்செய்க என உபதேசித்தார். 17உ குருகுலத்திற்கு விஜயம் செய்து நமது ஆசிரியர் செய்த பாதபூஜை சால்வை இவைகளை ஏற்று மாணவர்களுக்கும் அனைவர்க்கும் ஆசிபுரிந்தார். புத்தகசாலையைக் கடாக்ஷித்தார்.

---

**அக்நே க்ருஹபதே என வேதம் கூறுகிறது.**

# ஸாமவேத ஸந்த்யாவந்தனம்

## ஜப அர்த்தம்.

ப்ரும்மலோகம் முதல் பாதாளம் வரையும் லோகா லோகம் என்ற பர்வதம்வரையிலும் வஸிக்கின்ற பிராம்மணர்களுக்கு நித்யம் நமஸ்காரம். 2. பூமியிலுள்ளவைகளும் விக்நத்தை செய்பவைகளுமான பூதங்கள் ஶிவனுஜ்ஞையால் வெளியில் செல்லட்டும். 3. பூமியை சுமக்கின்ற உக்ரமான பூத பிஶாசங்களுக்கு இடையூறின்றி ஜபத்தை ஆரம்பிக்கின்றேன்.

**ஜப ஸங்கல்பம்:** ஶுக்லாம்-ஶாந்தயே. ஓம்பூ:+ரோம் மமோபாத்த+யர்த்தம் ப்ராதஸ் ஸந்த்யா காயத்ரீ மஹா மந்த்ர ஜபம் கரிஷ்யே. மாத்யாந்ஹிக காயத்ரீ ஜபம் கரிஷ்யே. ஸாயம் ஸந்த்யா காயத்ரீ ஜபம் கரிஷ்யே.

ப்ரணவஸ்ய ரிஷி: பிரும்மா (தலை) தேவீ காயத்ரீ சந்த: (மூக்கு) பரமாத்மா தேவதா (மார்பு) பூ⁴ராதி³ ஸப்த வ்யாஹ்ருதீநாம், அத்ரி ப்⁴ருகு³ குத்ஸ வஸிஷ்ட² கௌதம, காஶ்யப, ஆங்கீரஸ ரிஷய:, காயத்ரீ, உஷ்ணிக் அநுஷ்டுப், ப்³ருஹதீ பங்க்தி த்ருஷ்டுப் ஜக³த்ய: சந்தாம்ஸி அக்நி வாயு அர்க்க வாகீ³ஶ வருண இந்த்ர விஶ்வே தேவா தேவதா:. காயத்ரீ ஶிரஸ: ப்ரம்மாரிஷி: அநுஷ்டுப்சந்த: பரமாத்மா தேவதா. ஓம்பூ:+ஸுவரோம் என பத்து பராணயாமம் செய்து

ஆயாது இதி அநுவாகஸ்ய வாமதேவ ரிஷி: அநுஷ்டுப் சந்த: காயத்ரீ தேவதா ||

**आयातु वरदा देवी अक्षरं ब्रह्मसंमितं। गायत्रीं छन्दसां माता इदं ब्रह्म जुषस्वनः। ओजोसि सहोसि बलमसि भ्राजोसि देवानां धाम नामासि विश्वमसि विश्वायुः सर्वमसि सर्वायु रभि-भूरों गायत्रीं आवाहयामि, सावित्रीमावाहयामि, सरस्वतीमावाह यामि ॥**

ஆயாது வரத³ா தே³வீ அக்ஷரம் ப்ருஹ்ம ஸம்மிதம் ।
க³ாயத்ரீம் ச²ந்தஸாம் மாதா இத³ம் ப்ரும்ம ஜுஷஸ்வந: ।

---

ஓஜோஸி ஸஹோஸி ப$^{3}$லமஸி ப்$^{4}$ராஜோஸி தேவாநாம் த$^{4}$ாம நாமாஸி விஶ்வமஸி விஶ்வாயு: ஸர்வமஸி ஸர்வாயு: அபி$^{4}$ பூ$^{4}$ரோம் க$^{3}$ாயத்ரீம் ஆவாஹயாமி, ஸாவித்ரீம் ஆவாஹயாமி, ஸரஸ்வதீம் ஆவாஹயாமி ||

ஸாவித்ர்யா ரிஷி: விஶ்வாமித்ர:, நிசத் காயத்ரீ சந்த: ஸவிதா தேவதா. காயத்ர்யாவாஹநே ஜபே விநியோக:

**கரன்யாஸம் :**

ஓம் தத்ஸவிது: — அங்குஷ்டாப்யாம் நம:
வரேண்யம் — தர்ஜநீப்யாம் நம:
ப$^{4}$ர்கே$^{3}$ா தேவஸ்ய– மத்$^{4}$யமாப்யாம் நம:
தீ$^{3}$மஹி — அநாமிகாப்யாம் நம:
தியோயோந: — கநிஷ்டி$^{2}$காப்யாம் நம:
ப்ரசோதயாத் — கரதல கர ப்ருஷ்டாப்யாம் நம:

**அங்கன்யாஸம்**

ஓம் தத்ஸவிது: - ப்ரஹ்மாத்மநே ஹ்ருதயாய நம:
வரேண்யம்-விஷ்ணு ஆத்மநே ஶிரஸே ஸ்வாஹா
பர்கோ தேவஸ்ய - ருத்ராத்மநே ஶிக$^{2}$ாயை வஷட்
தீ$^{4}$மஹி - ஸத்யாத்மநே கவசாய ஹும்
தி$^{4}$யோயோந: - க்ஞாநாத்மநே நேத்ராய வௌஷட்
ப்ரசோதயாத் - ஸர்வாத்மநே அஸ்த்ராய ப$^{2}$ட்
பூர் புவஸ் ஸுவரோமிதி திக்பந்த:

**த்யானம் :**

मुक्ता विद्रुम हेमनील धवलच्छायैर्मुखैस्त्रीक्षणैः
युक्तामिन्दुकला निबद्ध मकुटां तत्वार्थ वर्णात्मिकाम् ।
गायत्रीं वरदा ऽभयांकुश कशाश्शुभ्रं कपालं गुणं
शङ्खं चक्रमथारविन्दयुगळं हस्तैर्वहन्तीं भजे ॥

முக்தா வித்$^{3}$ரும் ஹேமநீல த$^{4}$வளச்ச$^{2}$ாயை: முகை$^{2}$: ஸ்த்ரீக்ஷணை: யுக்தாமிந்துகலா நிப$^{3}$த்$^{3}$த$^{4}$ மகுடாம் தத்வார்த்தவர்ணாத்மிகாம் | க$^{3}$ாயத்ரீம் வரத$^{3}$ாப$^{4}$யாங்குஶ கஶா: ஶுப்$^{4}$ரம் கபாலம் கு$^{3}$ணம் ஶங்க$^{2}$ம் சக்ரமத$^{2}$ாரவிந்த$^{3}$யுக$^{3}$ளம் ஹஸ்தைர்வஹந்தீம் ப$^{4}$ஜே ||

ओं भूर्भुवस्सुवः । तत्सवितुर्वरेण्यम् । भर्गो देवस्य धीमहि । धियो योनः प्रचोदयात् ॥

---

அகம் உடையாள் என்பது ஆமண்டயாள் ஆயிற்று.

ஓம் பூ$^4$ர்பு$^4$வ ஸ்ஸுவ; தத்ஸவிதுர் வரேண்யம் ப$^4$ர்கோ தேவஸ்ய தீ$^4$மஹி தி$^4$யோ யோந: ப்ரசோதயாத் ॥

[ப்ராணுயாமத்தில் உள்ள ப்ரணவம், ஏழுவ்யாஹ்ருதி, காயத்ரீ, காயத்ரீ ஶிரஸ் என்பவைகளுக்கு ரிஷி சந்தஸ் தேவதைகளைக் கூறி 10 முறை செய்தபின் காயத்ரீ ஆவாஹந மந்த்ரத்தின் ரிஷி சந்தஸ் தேவதைகளைக் கூறி ஆயாது என்று கூறுகிறோம். **அதன் பொருள்:** வரம் அளிக்கும் தேவியே! நீ அழிவில்லா ப்ரும்மம். வேதங்களுக்குத் தாய். அந்த ப்ரும்மஸ்வரூபத்தை அடையும்படிச் செய். நீ ஓஜஸ்ஸாகவும், சத்ருவை அகற்றும் சக்தியாகவும், பலமாகவும், ப்ரகாசமாகவும், தேவர்களுக்கு இருப்பிடமாகவும், உலகமாகவும், உலகின் ஆயுளாகவும், ஸர்வமாகவும், எல்லா ஆயுஸ்ஸாகவும், ஸகல பாபங்களையும் நீக்குபவராகவுமிருக்கிறீர். காயத்ரீ ப்ரணவம். ஸாவித்ரீ ஸரஸ்வதீஎன்ற ரூபமாக ஆவாஹநம் செய்கிறேன். காயத்ரீ மந்த்ரத்தைக்கொண்டே கரந்யாஸம் அங்கந்யாஸம்செய்து த்யாநம் செய்கிறோம். முத்து பவழம் ஸ்வர்ணம் கருப்பு வெளுப்பு இந்த வர்ணமுள்ளதும் மூன்றுகண்களுள்ள முகங்களுள்ளவளும் சந்த்ரக் கலையுள்ள மகுடமணிந்தவளும் தத்வார்த்தமுள்ள எழுத்து ரூபமானவளும், வரத அபய அங்குஶம் பாஶம் வெண்ணிறமுள்ள கபாலம் கயிறு ஶங்கம் சக்ரம் இரண்டு தாமரைப் புஷ்பங்கள் இவைகளைக் கரங்களில் தரித்தவளுமான தேவியை த்யாநம் செய்கிறேன்.]

ப்ராத: ஸந்த்யோபஸ்தாநம் கரிஷ்யே. மாத்யாந்நிக உபஸ்தாநம் கரிஷ்யே, ஸாயம் ஸந்த்யோபஸ்தாநம் கரிஷ்யே ॥

**उत्तमे शिखरे देवि भूम्यां पर्वतमूर्धनि ।**
**ब्राह्मणेभ्यो ह्यनुज्ञानं गच्छ देवि यथा सुखम् ॥**

உத்தமே ஶிக$^2$ரே தேவி பூ$^4$ம்யாம் பர்வத மூர்த்த$^4$நி ।
ப்ராஹ்மணேப$^4$யோஹ்யநுக்ஞாநம் க$^3$ச்ச தேவியதா ஸுகம்

[ஓ காயத்ரீ! பூமிக்குவந்து ஜபம்செய்யும் பிராம்மணர்களுக்கு அநுக்ரஹம் செய்து மிக உயர்ந்த மஹாமேருமலைக்கு ஸுகமாகப் போய்வாரும்.]

**காலை மாலைகளில் உபஸ்தாந மந்த்ரம்.**

**यशोऽहं भवामि ब्राह्मणानां यशो राज्ञां यशो विशाम् ।**
**यशस्सत्यस्य भवामि । भवामि यशसां यशः । पुनर्मां यन्तु देवता ।**

---

**அகம் உடையான் ஆமண்டயான் எனப் படுகிறுன்.**

**या मदपचक्रमुः । महस्वन्तो महान्तो भवामि । अस्मिन् पात्रे हरिते सोमपृष्ठे । रूपं रूपं मे दिश प्रातरन्हस्य तेजसः** *(என காலையி லும்)* **सायमन्हस्य तेजसः** (என ஸாயங்காலத்திலும்) **अन्नमुग्रस्य प्राशिषम् । अस्तु वयि मयि त्वयीदम् । अस्तु त्वयि मयीदम् । यदिदं पश्यामि चक्षुषा । त्वया दत्तं प्रभासया । तेन माभुंज । तेन भुक्षिषीय तेन माविश । अहर्नो अत्यपीपरत्** (காலை) **रात्रिर्नो अतिपारयत् ।** (மாலை) **रात्रिर्नो अत्यपीपरदहर्नो अतिपारयत् । आदित्यनावमारोक्षं पूर्णामपरिपादिनीम् । अच्छिद्रां पारयिष्णवीं शतारित्रां स्वस्तये । ओं नम आदित्याय नम आदित्याय नम आदित्याय । उद्यन्तं त्वाऽऽदित्यानूदीयासं ।** *(காலை)* **प्रतितिष्ठन्तं त्वाऽऽदित्यानु प्रतितिष्ठासम् ॥** *(மாலை)*

*யஶோஹம் ப$^{4}$வாமி ப்ராஹ்மணஞம் யஶோராக்ஞாம் யஶோவிஶாம் । யஶஸ் ஸத்யஸ்ய ப$^{4}$வாமி । பவாமி யஶ ஸாம்யஶ: । புநர்மா யந்து தே$^{3}$வதா । யா மத$^{3}$பசக்ரமு: । மஹஸ்வந்தோ மஹாந்தோ ப$^{4}$வாமி । அஸ்மின் பாத்ரே ஹரிதே ஸோம பிருஷ்டே$^{2}$ । ரூபம் ரூபம் மேதி$^{3}$ஶ ப்ராத ரன்ஹஸ்ய தேஜஸ: (காலை) ஸாயமன் ஹஸ்ய தேஜஸ: (மாலை) அன்ன முக்ரஸ்ய ப்ராஶிஷம் । அஸ்து வயி மயி த்வயீத$^{3}$ம் । அஸ்து த்வயி மயீத$^{3}$ம் । யதி$^{3}$தம் பஶ்யாமி சக்ஷுஷா । $^{3}$த்வயா தத்தம் ப்ரப$^{4}$ாஸயா । தேநமாபு$^{4}$ஞ்ஜ தேந பு$^{4}$க்ஷிஷீய தேநமா விஶ । அஹர்நோ அத்யபீபரத் । (காலை) ராத்ரிர்நோ அதிபாரயத் । (மாலை) ராத்ரிர்நோ அத்யபீபரத் அஹர்நோ அதிபாரயத் । ஆதி$^{3}$த்ய நாவ மாரோக்ஷம் பூர்ணம் அபரிபாதி$^{3}$நீம் । அஞ்சித்ராம் பாரயி ஷ்ணவீம் ஶதாரித்ராம் ஸ்வஸ்தயே । ஓம் நம ஆதி$^{3}$த்யாய நம ஆதித்யாய நம ஆதித்யாய । உத்$^{3}$யந்தம் த்வா ஆதித்ய அநூதீ$^{3}$யாஸம் (காலை) ப்ரதி திஷ்ட$^{2}$ந்தம் த்வா ஆதி$^{3}$த்ய அநு ப்ரதி திஷ்டா$^{2}$ஸம் (மாலை).*

---

**ஸ்த்ரீ புருஷனது வீடென்கிருள், பதி ஸதி வீடென்கிருன்.**



# தைத்திரீய உபநிஷத்

ப்ருகுவல்லி—நான்காவது அநுவாகம்.

मनो ब्रह्मेति व्यजानात्। मनसो ह्येव खल्विमानि भूतानि जायन्ते। मनसा जातानि जीवन्ति। मनः प्रयन्त्यभिसं विशन्तीति॥

**मनः** - மநமானது **ब्रह्मेति**-ப்ரும்மம் என்று **व्यजानात्** - அறிந்தார். **मनसो हि एव खलु** - மனதிலிருந்துதான் அல்லவா **इमानि भूतानि** - இந்த பூதங்கள் **जायन्ते** - உண்டாகின்றன. **मनसा** - மனதினால் **जातानि**-உண்டான பிராணிகள் **जीवन्ति** - பிழைத்திருக்கின்றன. **प्रयन्ति**- முடிவை அடையும் பூதங்கள் **मनः** - மனதை **अभिसंविशन्ति** - அடைகின்றன.

மனது க்ஞானஶக்தியுடன் கூடியிருப்பதால் அதை ப்ரும்மம் என எண்ணினார். மனதிலிருந்து உண்டாகி மனதால் ஜீவித்து மனதுடன் லயமாவதால் அதை ப்ரும்மம் என எண்ணினார்.

तद्विज्ञाय। पुनरेव वरुणं पितरमुपससार। अधीहि भगवो ब्रह्मेति। तँ होवाच। तपसा ब्रह्म विजिज्ञासस्व। तपो ब्रह्मेति। स तपोऽतप्यत। स तपस्तप्त्वा॥

**तत्** - அந்த மனோமய ப்ரும்மத்தை **विज्ञाय** - அறிந்து **पुनरेव** - மறுபடியும் **वरुणं** - வருணரான **पितरं** - பிதாவை **उपससार** - அடைந்தார். **भगवः** - பகவானே **ब्रह्म अधीहि** ப்ரும்மத்தைக் கற்பியும் **इति**-என்று **तं ह**-அவரை **उवाच**- சொன்னார். **तपसा** ह्म-ப்ரும்மத்தை **विजिज्ञासस्व**- அறி. **तपः** -தபஸ்ஸானது **ब्रह्मेति** - ப்ரும்மம் என்று **सः**-

---

*வீடு அக்னிக்கு சொந்தமா? ஸதிக்கா? பதிக்கா?*

அவர் **तपोतप्यत** - தபஸ் செய்தார். **सः** - அவர் **तपः तप्त्वा**- தபஸ்செய்து. [கருத்து: முன் கூறியதுபோலவேயாம்.]

**நாலாவது அநுவாகம் முற்றிற்று.**

**ஐந்தாவது அநுவாகம்.**

**विज्ञानं ब्रह्मेति व्यजानात् । विज्ञानाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते । विज्ञानेन जातानि जीवन्ति । विज्ञानं प्रयन्त्यभि संविशन्तीति ॥**

**विज्ञानं** -விக்ஞானத்தை **ब्रह्मेति**-ப்ரும்மம் என்று **व्यजानात्**- அறிந்தார். **विज्ञानात् हिएव खलु** - விக்ஞானத்தில் இருந்து அல்லவா **इमानि** - இந்த **भूतानि**-பூதங்கள் **जायन्ते** உண்டாகின்றன. **विज्ञानेन** - விக்ஞானத்திஞல் **जातानि**- உண்டானவைகள் **जीवन्ति**-பிழைத்திருக்கின்றன. **प्रयन्ति** அழியும் பூதங்கள் **विज्ञानं** - விக்ஞானத்தை **अभिसंविशन्ति** பிரவேசிக்கின்றன **इति** - என்று

ப்ருகு முனிவர் தவம்செய்து நான்காவது முறையாக விக்ஞானத்தை ப்ரும்மம் என அறிந்தார், 'விக்ஞானம் யக்ஞம் தநுதே' என வேதம் கூறுவதாலும் க்ஞாநமுள்ள வரிடமிருந்தே உலகம் உண்டாகின்றது. விக்ஞாநத்தால் ரக்ஷிக்கப்பட்டு அதிலேயே லயமாகின்றது ஆதலாலும் அப்படி அறிந்தார்.

**तद्विज्ञाय । पुनरेव वरुणं पितर मुपससार । अधीहि भगवो ब्रह्मेति । त ँ होवाच । तपसा ब्रह्म विजिज्ञासस्व । तपो ब्रह्मेति । स तपो तप्यत । स तप स्तप्त्वा ॥**

**तत्** அந்த விக்ஞானத்தை **विज्ञाय** ப்ரும்மமென அறிந்து **पुनरेव** மறுபடியும் **वरुणं** வருணரான **पितरं** தந்தையை

---

**மூவருக்கும் சொந்தம். ஔபாஸனமாவது செய்தால்**

उपससार அடைந்தார். भगवः பூஜிக்கத் தக்கவரே ब्रह्म- ப்ரும்மத்தை अधीहि கற்பியும் इति என்று तं அந்த ப்ருகு வை நாடி उवाच ह பிதா சொன்னார். तपसा தபஸ்ஸினால் ब्रह्म ப்ரும்மத்தை विजिज्ञासस्व அறி. तपः தபஸ்ஸானது ब्रह्म ப்ரும்மம் इति என்று सः அந்த ப்ருகு तपः தவத்தை अतप्यत செய்தார். सः அவர் तपः தவத்தை तप्त्वा செய்து

விக்ஞானத்தை ப்ரும்மம் என்று அறிந்து, அதுதான் ப்ரும்மமா? என்று யோசித்து மறுபடியும் தந்தையினிடம் சென்று ப்ரும்மஸ்வரூபத்தைக் கூறுங்கள் என்று அவரை வேண்டினார். அவர் புத்ரனை நோக்கி [இன்னும் இவன் சுத்த ப்ரும்மத்தை அறியவில்லை. படிப்படியாக மேலே செல்கிறான். மறுபடியும் தவம் செய்து வரட்டும் என] தவத்தினால் ப்ரும்மத்தை அறி. தபஸ்தான் ப்ரும்மம் என்று கூறினார். ஆத்ம வித்தையில் அவாகொண்டு வெறுப்பில்லாமல் ப்ருகு மறுபடியும் தவம் செய்தார்.

### ஆறாவது அநுவாகம்.

आनन्दो ब्रह्मेति व्यजानात्। आनन्दाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते। आनन्देन जातानि जीवन्ति। आनन्दं प्रयन्त्यभिसंविशन्तीति ॥

आनन्दः ஆனந்தமானது ब्रह्मेति ப்ரும்மம் என்று व्यजानात् அறிந்தார். आनन्दात् हि एव खलु ஆனந்தத்திலிருந்தல்லவா इमानि भूतानि இந்த பூதங்கள் जायन्ते உண்டாகின்றன. जातानि உண்டான பூதங்கள் आनन्देन ஆனந்தத்தால் जीवन्ति பிழைக்கின்றன. प्रयन्ति அழியும் பூதங்கள் आनन्दं ஆனந்தத்தை अभिसंविशन्ति பிரவேசிக்கின்றன इति என்று

ஐந்தாவதாக ஆனந்த ஸ்வரூபத்தை ப்ரும்மம் என வேதம் கூறுவதால் அதை ப்ரும்மம் என அறிந்தார். அதிலிருந்தே உலகம் உண்டாகியிருக்கின்றது அல்லவா.

---

நமது பெற்றோருக்குச் சொந்தமாக இருந்தது

**सैषा भार्गवी वारुणी विद्या । परमे व्योमन् प्रतिष्ठिता ।**

**सा** ப்ரஸித்தமான **एषा** இந்த **भार्गवी** ப்ருகுவினுல் அறியப்பட்ட **वारुणी** வருணனுல் கூறப்பட்ட **विद्या** வித்யை யானது **परमे** சிறந்ததான **व्योमन्** ஆகாஶத்தில் **प्रतिष्ठिता** முடிவடைந்தது.

உபநிஷத்தில் பிரஸித்தமான இந்த வித்யை பிருகு முனிவரால் அறியப்பட்டது. வருணனுல் கூறப்பட்டது. மநிதன் ஹ்ருதயத்தில் உள்ள ஆகாஶத்தில் பிரதிஷ்டை யானது. உடலிலிருந்து அந்நம் ப்ராணன் மநஸ் விஞ்ஞா நம் ஆநந்தம் என்ற முறையில் ஒவ்வொன்ருக ப்ரும்மம் என அறியப்பட்டு ஹ்ருதயாகாஶத்திலுள்ள ஆனந்தத் தில் வந்து முடிவடைந்தது.

**य एवंवेद प्रति तिष्ठति । अन्नवा नन्नादो भवति । महान् भवति प्रजया पशुभि र्ब्रह्मवर्चसेन । महान्कीर्त्या ॥**

**यः** எவன் **एवं** இம்மாதிரி **वेद** அறிந்தாஞே **सः** அவன் **प्रतितिष्ठति** ப்ரும்மத்தினிடம் லயிக்கிருன். **अन्नवान्** அன்ன முள்ளவனுகவும் **अन्नादः** அன்னங்களே உண்ணத்தக்க ஶக்தி உள்ளவனுகவும் **भवति** ஆகிருன். **प्रजया** குழந்தை களாலும் **पशुभिः** பஶுக்களாலும் **ब्रह्मवर्चसेन** ப்ரும்ம தேஜஸ்ஸினுலும் **महान्** சிறந்தவனுக **भवति** ஆகிருன். **कीर्त्या** கீர்த்தியாலும் **महान्** சிறந்தவனுக ஆகிருன்.

இங்கே கூறிய பார்க்கவீ வாருணீ என்ற வித்யையை எவன், கூறியபடி அறிகிருஞே அவன் ப்ரும்ம ஸ்வரூபத் தில் ஒன்ருக இருப்பான். நல்ல குழந்தைகளாலும் பசுக் களாலும் ப்ரும்ம வர்ச்சஸ்ஸினுலும் மிகச் சிறந்தவனுக இருப்பான். நற் கீர்த்தியும் பெறுவான். இந்த வித்யை யை உபாஸிப்பவன் அன்னத்தை நிந்திக்கக் கூடாது என் பது முதலிய விரதத்தைக் கைக்கொள்ளவேண்டும்.

**ஆருவது அநுவாகம் முற்றிற்று.**

---




விராட பர்வா—தைமீ தொடர்ச்சி.

கே : முரடனுன கீசகன் ஸகோதரியின் சொல்லேமாத்ரம் கேட்பஞ?

ப : அது ஏது? திரௌபதியை எந்த வகையிலுலாவது தனக்கு ஸ்வாதீனப்படுத்தாவிடில், அவள் முன்னே யே பிராணனே விடுவதாகக் கூறினுன்.

கே : ஒருபக்கம் தர்மம்! ஒருபக்கம் ஸஹோதரவாஞ்சை! ராணி என்ன செய்தாள் ?

ப : வேறென்ன செய்வது? ஏதோ ஒரு உணவுப் பொருளே வாங்கி வரும்படி உன்னிடம் அனுப்பு கிறேன். அவளேப் பலாத்காரம் செய்யாமல் ஸமா தானப்படுத்தி வசமாக்கிக்கொள். பலாத்காரம் செய்தால் அவளது பதி ஐந்து கந்தர்வர்கள் உன்னேக் கொல்வார்களாம் என்ருள்.

கே : அம்மா ! எனது பலம் உனக்குத் தெரியாதா ? ஆயிரம் கந்தர்வரை அறை க்ஷணத்தில் கொல் வேன். ஆனுலும் ஸமாதானப்படுத்தி வஶப்படுத்தி ஞல் தான் இன்பத்துடன் அவளே ஏற்கலாம்.

ப : எனக்கென்னமோ மநஸ் சாந்தமாக இல்லே. நீ போ.

கே : ராணியல்லவா? சொன்னபடிஅவளேயனுப்பினுளா?

ப : ஆம். நீ போய் எனக்கென என் ஸஹோதரன் செய்திருக்கும் பொருளே வாங்கிவா என திரௌ பதியிடம் உத்தரவிட்டாள்.

கே : கீசகன் ஸமாசாரம் தெரிந்திருந்தும் எப்படி போவாள் ?

ப : போகமாட்டேன். வேறு எவரையாவது அனுப் புங்கள் என்ருள். வேறு வழியில்லே. அங்கு சென் ருள். அவன் நயமாகவும் பயமாகவும் தன்னே மணக்க கேட்டு ஸம்மதிக்காததால் அவள்கையைப் பிடித்தான்.

---

நாம் உள்ளவரை நம் சொந்தம் என்று கூறுகிறேம்.

கே : ஆஹா! ஸஹோதரி சொல்லையும் மறந்து பலாத்காரம் செய்தானே! அவன் அழியத்தான் வழி! அப்புறம்.

ப : அவன் கையை உதரித்தள்ளி ராஜஸபைக்கு ஓடினாள். அங்கும் துரத்திச் சென்று காலால் அவளை உதைத்தான்.

கே : ஐயய்யோ! ஸபையில் யாரும் தடுக்கவில்லையா?

ப : அவள் கீசகன் வீடு செல்லும்போதே தேவதைகளை வேண்டிக்கொண்டே கிளம்பினாள். ஸூர்யனால் அனுப்பப்பட்ட ஒருவன் கீசகனைக் கீழேத் தள்ளி உதைத்தான். அது ஒருவர் கண்ணிலும் படவில்லை.

கே : திரௌபதி கதி என்ன ஆயிற்று ?

ப : எழுந்தாள். ஸபையில் முறையிட்டாள். மகாராஜா இதை தாங்கள் பார்த்திருந்தும் என்னைக் காக்கவேண்டாமா? என்றாள்.

கே : அரசன் கீசகனுக்கு அடங்கி பயந்தவனல்லவா? என்ன பதில் சொன்னான் ?

ப : பயந்தவன் எனக்காட்டுவானா? ஸைரந்த்ரி! உனக்கும் கீசகனுக்கும் முன் என்ன நடந்ததோ? அதை அறியாமல் நான் ஒன்றும் செய்வதற்கில்லை என்றான்.

கே : ஸாமர்த்யமாகப் பேசினான். தர்மர் வஸ்த்ர அபஹாரத்தையே பொறுத்தவர்! பீமன் சும்மா இருந்தானா ?

ப : நன்றாகக் கேட்டாய். அருகிலிருந்த மரத்தைப் பார்த்தான். கீசகனைப் பார்த்தான் உதடு துடித்தது.

கே : அம்மரத்தைப் பிடுங்கி கீசகனைக் கொல்வதாக எண்ணினான் போலும். தர்மர் அதற்கு இடமளிப்பாரா? மேலே?

ப : தர்மர் தன் காலை மற்ற காலால் அமிழ்த்தி நசிக்கிக் காட்டினார்.

---

ஸ்வம் என்பதே சொந்தம் சொத்து என ஆயிற்று.




[ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.]

"திருப்பதியில் விளங்கும் ஸ்வாமி யார்" என்று உமக்குத் தெரியுமா?

"ஸ்ரீனிவாஸன்!"

இல்லை! "ஸுப்ரம்மண்யன்!"

"சரி!"

"ஸ்ரீனிவாஸன் என்றீர்! ஸுப்ரம்மண்யன் என்றால் சரி என்கிறீரே! ஏன்? இன்னும் வேங்கடராமன், வேங்கடகிருஷ்ணன், வேங்கட நரஸிம்மன், வேங்கடேச்வரன் என்றெல்லாம் அழைக்கிறோமே! அது சரி இல்லையா?"

மேல் கண்ட ஸம்பாஷணைகள்போல் பல உண்டு. இஷ்ட தைவத்தினிடம் உள்ள பற்றுதலால், இவ்வாறு பேசுபவர்களிடம் சிலசமயம் கருத்து வேறுபாடுகளுடன் சிறு சண்டைகளும் விளைகின்றதைப் பார்த்திருக்கிறோம். ஆலயங்களில் எழுந்தருளியிருக்கும் சக்தி நிறைந்த தெய்வங்களிடை ஏற்படுகின்ற இந்த ஸந்தேகமே, பிறகு அமைதியுடன் நன்கு சிந்திக்கப்படின், உறுதிகொண்ட தெய்வ பக்தியே காரணமாகும் என்பது புலனாகும்! இதுபற்றி ஸ்ரீதியாக ராஜஸ்வாமிகளின் கீர்த்தனை ஒன்று ப்ரஸித்தமானது. இக்கீர்த்தனை கானத்திற்கு உகந்தது என்று அறிவோம்! கருத்துக்கும் சிந்தனைக்கும் உகந்தது என்பதை இங்கு சிறிது பார்ப்போம்!

ராகம்: கல்யாணி] **பல்லவி.** [தாளம்: ஆதி.

ஏ தாவுனரா நிலகடநீகு
யெஞ்சி ஜூட நகபடவு — (ஏ)

**அனுபல்லவி.**

ஸீதா கௌரீ வாகீச்வரீ யனு
ஸ்ரீ ரூபமுலந்தா கோவிந்தா — (ஏ)

*சரணம்.*

பூ கமலார்க்க நில நபமந்து
லோக கோடுலந்தா
ஸ்ரீ கருடகு தியாகராஜ கரார்ச்சித
சிவ மாதவ ப்ரம்மாதுல யந்தா. (ஏ)

பொருள் — "ஹே ராமா! நீர் எந்த இடத்தில் இருக்கிறீர்? உமது வாஸம் எங்கே? விரும்பித் தேடியும் என்னால் அறியமுடியவில்லையே! ஸீதை, கௌரீ, வாகீச்வரீ போன்ற ஸ்த்ரீ ரூபங்களில் காணப்படுகிறீரா? பூமி, சூரியன், கமலம் (ஜலம்), காற்று, ஆகாசம் மற்றும் அகில ஜீவகோடிகளுள் திகழும் அந்தர்யாமியா? சிவன், மாதவன், ப்ரும்மா என்ற மும்மூர்த்தி ஸ்வரூபங்கள் உம்முடையதா? அறிய ஆவல்கொண்டுள்ளேன். (நான் அறிந்தது ஒன்றுண்டு.) எந்த இடத்தில் எப்படி நீர் விளங்கினாலும், உம்மை ஆஶ்ரயித்தவர்களுக்கு அருள் செய்பவர் என்பதுவே. இது ஒன்றே போதும்.

**கருத்து** — வீணான சமய சர்ச்சையில் பொழுதைப் போக்காமல், எந்த தெய்வத்தை உபாஸிக்கிறாயோ, அதில் நீங்காத சிரத்தையும், பக்தியும்கொண்டு வழிபட்டால் நன்மை உண்டு. எல்லாம் பரப்ரும்மத்தின் ஸ்வரூபமே! உயர்வு, தாழ்வு என்ற புத்தி நீங்கினால் நல்லதொரு ஞானம் பிறக்கும்.

---



---

**ஸாதுக்கள் வந்து கால் அலம்ப வேண்டும்.**

# சாந்தி விலஸாம்.

பக்திப் பகுதி.

(கணபதி தீக்ஷிதர்.)

17. गन्तव्योऽध्वा सकल दुरवस्थान संपात भूमिः
गत्वा दृश्यः त्रिभुवन जनायुष्कलान्तः कृतान्तः ।
दृष्ट्वा लभ्या निरय जनिता यातना नेकभेदा
विस्मृत्येदं निखिल मपि तु व्यर्थ मायुर्नयामः ॥

கந்தவ்யோத்வா ஸகலதுரவஸ்தாந ஸம்பாத பூமி:
கத்வா த்ருஶ்ய: த்ரிபுவந ஜநாயுஷ் கலாந்த:க்ருதாந்த: ।
த்ருஷ்ட்வா லப்யா நிரய ஜநிதா யாதநா நேக பேதா
விஸ்ம்ருத்யேதம் நிகில மபி து வ்யர்த்தமாயுர்நயாம; ॥

எல்லா துக்கமும் நிறைந்த இடத்திற்கு நாம் போகவேண்டும். மூவுலகத்தவரின் ஆயுஸ்ஸைப் போக்கும் யமனைப் பார்க்க வேண்டும். அங்கு பலவகையான யாதனைகளை அநுபவிக்கவேண்டும். இதெல்லாவற்றையும் மறந்து ஆயுளை வீணாகக் கழிக்கிறோமே! ஒவ்வொரு நிமிஷமும் புண்யத்தைச் செய், வீணாக்காதே!

18. काले काले किमुपनतं भुंजते भोज्य जातम्
गृह्णन्त्यंभो नकि मथ न किं संविशन्ति क्षपासु ।
पुष्णन्ति स्वान्न किमु पृथुकान् स्त्रीषु किं नो रमन्ते
कृत्या कृत्य व्यपगत धियां कस्तिरश्चांच भेदः ॥

காலே காலே கிமுபநதம் புஞ்ஜதே போஜ்ய ஜாதம்
க்ருஹ்ணந்த் யம்போ நகிமதநகிம் ஸம்விஶந்திக்ஷபாஸு ।
புஷ்ணந்தி ஸ்வாந் நகிமுப்ருதுகான் ஸ்த்ரீஷு கிம் நோரமந்தே
க்ருத்யா க்ருத்ய வ்யபகததியாம் கஸ்திரஶ்சாஞ்ச பேத:

ஒவ்வொருவேளையும் கொண்டு வந்த உணவை உண்ணவில்லையா? ஜலம் குடிக்க வில்லையா? இரவில் தூங்கவில்லையா? தன் குழந்தையைப் போஷிக்கவில்லையா? பெண்களிடம் சுகத்தை அனுபவிக்கவில்லையா? இது நல்லது, செய்யவேண்டியது. இதுகெட்டது,

---

அநேகர் வந்து கால் கழுவி சேராக இருக்கவேண்டும்.

செய்யக்கூடாதது என்ற பகுத்தறிவில்லா மனிதர்க்கும் மாட்டிற்கும் என்ன பேதம்? மிருகம்போல் காலங்கழிக்காதே! நல்ல கர்மாசெய்.

19. कृच्छ्रात् लब्धं धनमपि शतांशाधिक प्राप्तिलोभात्
पत्रे किंचिल्लिखित मुपलभ्यैव सर्वं त्यजामः ।
शास्त्रैः सिद्धे बहुशत गुणाधिक्य लाभे परत्र
व्यर्थं शंका कलुष मनसः नोत्सृजामोर्थलेशम् ॥

க்ருச்ராத் லப்தம் தநமபி ஶதாம்ஶாதிக ப்ராப்திலோபாத்
பத்ரே கிஞ்சில்லிகித முபலப்யைவ ஸர்வம் த்யஜாம: ।
ஶாஸ்த்ரை: ஸித்தே பஹுஶத குணாதிக்ய லாபே பரத்ர
வ்யர்த்தம் ஶங்கா கலுஷமநஸ: நோத்ஸ்ருஜாமோர்தலேஶம் ॥

கஷ்டப்பட்டுத் தேடிய பணத்தை ஒரம்ஶமான அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு ஒரு கடிதத்தில் எழுதி வாங்கிக்கொண்டு பணத்தையெல்லாம் கொடுக்கிறோம். மறுபிறவியில் ஆயிரக்கணக்காக அதிக தநம் கிடைக்கும் என்று ஶாஸ்திரங்கள் நிச்சயமாகக் கூறியும் ஒருகாலனுகூட தாநம் செய்ய மநமில்லையே. ஸத்பாத்ரத்தில் கொடுத்து வை. மறுபிறவியில் யதேஷ்டமாகக் கிடைக்கும்.

20. जीर्णे रुग्णे विकल करणे शत्रुभिर्वा गृहीते
स्वस्मिन्कोर्थो भवति सुखदः कश्च काम प्रसंगः ।
मा भूदेतत्सकल मथवा स्वायुषः किंप्रमाणं
निश्चित्यैवंदुरित निचयः चीयते निर्विशंकैः ॥

ஜீர்ணே ருக்ணே விகல கரணே ஶத்ருபிர்வா க்ருஹீதே
ஸ்வஸ்மின் கோர்த்தோ பவதி ஸுகத: கஶ்சகாமப்ரஸங்க:
மாபூதேதத் ஸகல மதவா ஸ்வாயுஷ: கிம்ப்ரமாணம்
நிஶ்சித்யைவம் துரித நிசய: சீயதே நிர்விஶங்கை: ॥

வயதானாலும் நோய்வாய்ப் பட்டாலும் இந்திரியமிழந்தாலும் ஶத்ரு பிடித்துக் கொண்டாலும் என்ன சுகத்தைப் பெற முடியும். காமந்தானெப்படி? இவைதெல்லாம் இல்லாமல் இருந்தாலும் நாம் ஜீவித்திருப்பது என்ன நிலை? இவ்வளவு தெரிந்திருந்தும் பாபத்தைப் பயமின்றி செய்கிறோமே. அடுத்த நிமிஷம் எப்படியோ? இப்போதே புண்யம் செய். பாபத்தையேனும் செய்யாதிரு.

---

**ஸ்வாஹா ஸ்வதா என தேவ பித்ரு ஹோமம் வேண்டும்.**

# ஸுபத்ரைக்கு ஸ்ரீ கிருஷ்ணனுபதேசம்.

மாதர் பகுதி.

[அர்ஜுனனுக்கு பகவான் ஸுபத்ரை எனும் தனது ஸஹோதரியை மணம் செய்வித்தார். கிருஷ்ணன் திரௌபதியை நோக்கி உனக்கு விரோதமாக ஸுபத்ரையை உனது பதிக்கு அளித்தேன் வருந்தாதே என்றார்.]

**திரௌபதி:** விரோதமெப்படி? வம்ஶத்தை விருத்தி செய்ய புருஷர் பல ஸ்த்ரீகளை மணப்பது சாஸ்த்ர விரோதம் இல்லையே.

**கிருஷ்ணன்:** சாஸ்த்ர விரோதமில்லைதான். நமக்கு சக்களத்தி வந்தாளே என உனக்குதான் கஷ்டமிருக்குமோ என எண்ணினேன்.

**தி:** நன்றாகச்சொன்னீர்கள். தங்கள் ஸகோதரி! என் பதி, பிரியமாக மணந்த பத்னி. எனக்கும் அவளிடம் பிரியமே தவிர கஷ்டமில்லை

**கி:** திரௌபதீ! நீ உத்தமி ஆனதால் அப்படி நினைக்கிறாய்! உனக்கு நான் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. சிறுவளானதால் ஸுபத்ரைக்கு சில வார்த்தைகளைக் கூறுகிறேன்.

**தி:** தாங்கள் சொல்வது வெறும் வார்த்தை யல்ல. கீதாசார்யன் வார்த்தை உபதேசமொழியன்றோ? அவளை வ்யாஜமாகக் கொண்டு எல்லோருக்கும் உபதேசம் செய்யுங்கள் நல்லது.

**கி:** ஸுபத்ரே! பதிக்கு ப்ரதிகூலமான ஸ்த்ரீ பெற்றோர் குலத்திற்கே ஏற்பட்ட வ்யாதியாவாள்.

**ஸுபத்ரை:** அண்ணா! உயர்ந்த உங்களது குலத்திற்கு நான் நோயாகஇருப்பேனா? ஸதா அனுகூலமாகவேஇருக்கிறேன்.

**கி:** பதி கோபங்கொண்டு ஏதேனும் பேசினால் பதில் கூறாதே.

**ஸு:** இல்லை. பேசினால் கோபம் அதிகமாகுமே.

**கி:** திரௌபதியை சக்களத்தியாக நினைக்காதே.

**ஸு:** ஏற்கெனவே நமது பந்து. மஹாஸதீ அவளை ஸகியாகவே கருதுவேன்.

---

**ருத்ரம் சமகம் முதலிய வேத சப்தம் வேண்டும்.**

**கி :** அடிக்கடிப் பிறந்த வீட்டை நினைத்து அங்குவர எண்ணக் கூடாது. பதியுடன் தங்கியிருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் தவம் செய்வதாகும். குருவை நிந்திக்கும் சிஷ்யன் பதியை நிந்திக்கும் ஸ்த்ரீ, பிதாவை நிந்திக்கும் புத்ரன் ஆகிய மூவரும் மல ஜலம் நிறைந்த நரகக் குழியில் விழுவர்.

**ஸு :** தனக்கு நன்மை தருபவர் எவராயினும் அவரை நிந்திக்கக் கூடாது. பேரின்பத்திற்கு வழிகாட்டும் இவர்களை நிந்திப்பவர்க்கு இந்த நரகங் கூட போதாது.

**கி :** கலி தனது விஜயத்திற்கு ஸ்த்ரீகளையே முக்ய அஸ்தரமாகக் கையாளுகிறான். ஸாக்ஷாத் ஸீதாதேவியே லக்ஷ்மணனை சொல்லக் கூடாத சொற்களால் தாக்கினாள்.

**ஸு :** வாஸ்தவம்தான். அதனால்தான் மஹாலக்ஷ்மியாக இருந்தும் ராவணனிடம் சிக்கி சொல்ல முடியாத துன்பம் அனுபவித்தாள்.

**கி :** தேவியே அப்படி செய்ததுதான் ஆச்சர்யம். இங்ஙனம் பதி பந்துவை நிந்தித்தால் கூட பாபம் என்று உலகிற்கு காட்டவே உலகை ரக்ஷிக்க வந்த மாதா அப்படிக்கூறினாள்.

**ஸு :** ஸ்த்ரீகளை ஸந்தோஷப் படுத்த அவர்கள் சொற்படி நடந்தால் இப்படித்தான்கஷ்டம் வரும் என்று காட்டவே ஸ்ரீ ராமச்சந்த்ர மூர்த்தியும் மாயா மானைப் பின் தொடர்ந்தார் போலும்.

**கி :** ஆம் நன்றாகக் கூறினாய். அந்த கதையை கவனி. பர்த்தாவுக்குப் பிரிய மில்லாத கார்யத்தைச் செய்யாதே? இப்படிப் பட்டவள் தனதுபெற்றோரது குலத்திற்கு பூஷணமாவாள்.

**ஸு :** அங்ஙனமே நடக்கின்றேன். பதிசுஸ்ரூஷை தவிர பெண்களுக்குத் தனியான வைதிக கர்மா உண்டோ?

**கி :** பதி செய்யும் நற்காரியங்களுக்கு பணிவிடை செய்தால் அதே ஸ்த்ரீகள் செய்யும் விரதம் பூஜையாகும். தனியாக ஒன்றும் வேண்டாம்.

**ஸு :** ஆக்ஷேபித்துக்கேட்பதாக நினைக்கக் கூடாது. ஸந்தேஹமே கேட்கிறேன். அவர்செய்யும் கர்மா மனைவிக்கு எப்படிவரும்?

**கி :** விவாஹம் ஆகும்வரை தனியாக இருந்த ஸ்த்ரீ விவாஹம் ஆனபின் புருஷனோடு சேர்ந்து ஒரே ஜீவனாகிறாள். சரீரம் தனியாகக் காணப்பட்டாலும் ஜீவன் ஒன்றாகும்.

---

**இவைகள் இருந்தால் தான் வீடு இல்லையேல் சுடுகாடாம்.**

ஸ்வா : சிறிது புரியும்படி விளக்கமாகக் கூறுங்கள்.

கி : வயிற்றுக்கு உணவையளிக்கிறது கை. வாய் அதை விழுங்குகிறது. உணவால் உண்டாகும் பலம் வயிற்றிற்கு மாத்ரமா வருகிறது. கை கால்களுக்கு உண்டாகவில்லையா? ஸ்த்ரீ ஒரு அங்கமாகிறாள், ஆதலால் புருஷன் செய்வது அவளுக்குப் பயன் தரும். ஸந்தேஹமில்லை.

ஸ்வா : ஆனால் ஏகாதசி விருதம் பஞ்சாக்ஷரீ சூர்ய நமஸ்காரம் அல்லது அஷ்டாக்ஷரீ ஸமாச்ரயணம் முதலியவைகளைச் செய்யலாமா கூடாதா?

கி : நன்றாகச் செய்யலாம். இதெல்லாம் அவரும்செய்து தனது அங்கமான ஸ்த்ரீகளையும் செய்யச் சொல்வர். செய்யலாம். புருஷனுக்கு அவைகளை அநுஷ்டிக்க முடியாத போது உத்தரவு கொடுத்தால் தனியாகவும் செய்யலாம். அவரை அறியாமல் ஒருநாள் உபவாஸமிருந்தாலும் அன்றைய மாங்கல்யம் குறையும். அன்றியும் பஞ்சாக்ஷரீ முதலியவை விவாஹம் போல் அவசியம் செய்துகொள்ளவேண்டியவை. அவை இல்லா விடில் உடல் சுத்தமில்லை. பூஜை ச்ராத்தம் முதலியவைகளுக்கு பாகம் செய்ய யோக்யதை இல்லை. ஆதலால் அவை முக்யமேயாம்.

**ஜோதிஷப் பகுதி.**

# மாசிமாத கோசார பலன்.

**ஜோதிஷபானு, E. S. K. ஸ்வாமி,**
பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்.

## மேஷ ராசி

*அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய.*

குரு அஷ்டமத்திலும், சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிறார்கள். இதனால் குடும்பத்தில் செலவினங்கள் அதிகமாகும். சில பொருள் விற்க நேரும். கோபமும், கடுஞ்சொல்லும் விருத்தியாகும். சிலருக்கு சுப முயற்சிகளும், செலவுகளும் உண்டாகும். செய்தொழிலில் சில சிக்கல்கள் ஏற்பட்டு ஆதாயம் நிதானப்படும். பரமசிவனுக்கு அபிஷேகம்செய்ய உக்ரம் தணிந்து நன்மை ஏற்பட்டுவரும்.

## ரிஷப ராசி

*கிருத் 2ம் பாதம் முதல் ரோகிணீ மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய.*

குரு ஸப்தமத்திலும், சனி அஷ்டமத்திலும், ராகு பஞ்சமத்திலும், கேது லாபத்திலும் இருக்கிறார்கள். முயற்சிகள் பலிதமாகும். ஆரோக்ய வகையில்

செலவு செய்ய நேரும். குடும்ப சௌக்யம் ஏற்படும். வியாபாரம் புதிய முறையில் ஓங்கும். பிறர் சகாயம் ஏற்படும். வெளியூர் போய்வர நேரும். உத்யோகத்தில் நன்மை ஏற்படும். ருத்ர ஜபம் செய்து கருப்பு கம்பளி தானம் செய்ய அஷ்டம சனி தோஷம் விலகும்.

## மிதுன ராசி

*மிருக. 3ம்பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய*

குரு ஆறிலும், சனி ஏழிலும், ராகு நான்கிலும், கேது பத்திலும் இருக்கிறுர்கள். இதனுல் செய்தொழிலில் புதிய மாறுபாடு உண்டாகும். விருத்தி ஏற்படும். வீண்வகையில் செலவுகளும், சிலர் பகையும் ஏற்படும். உத்தியோகத்தில் சில மாற்றமும், சுப சங்கதிகள் கேள்விப்படுதலும் உண்டாகும். சிலருக்குத் தாய் வகையில் கிலேசமும் ஏற்படும். குடும்ப சுகம் உண்டாகும். விஷ்ணுவுக்குப் பால் அபிஷேகம் செய்ய வேதனை விலகி பொருள் சேர்க்கை ஏற்படும்.

## கடக ராசி

*புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம் ஆயில்யம் முடிய*

குரு பஞ்சமத்திலும், சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்யத்திலும் இருக்கிறுர்கள். இதனுல் சொத்து பாக்கிய வகையில் சில தகருறுகள் ஏற்படும். குடும்ப சுகம் உண்டாகும். விவாத விஷயம் அனுகூலமாகும். பொருள் சேர்க்கையுண்டாகும். உத்யோகத்தில் வருமானம் சிலருக்குக் கூடும். மேலோர் ஆதரவு கிடைக்கும். வெளியூர் போய்வர நேரும். துர்க்கையை ஆராதித்து ஜபம் செய்விக்க க்ஷேமாபிவிருத்தி ஏற்படும்.

## சிம்ம ராசி

*மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய.*

குரு நான்கிலும், சனி பஞ்சமத்திலும், ராகு தனத்திலும், கேது அஷ்டமத்திலுமிருக்கிறுர்கள். இதனுல் தன நடப்பில் சௌகரியமுண்டு. அலேச்சலும், பொறுப்பும் அதிகமாகும். உத்யோகம் ஸம நிலேயிலிருக்கும். வியாபாரவகையில் நன்மையும், ஆதரவும் ஏற்பட்டுவரும். சுப முயற்சிகள் சிலருக்குக் கூடிவரும். பெரிய மனுஷ்யர்கள் ஆதரவு, குடும்ப மாற்றம் சிலருக்கு ஏற்பட்டுவரும். பிரதி ஞாயிறிலும் சூரிய நமஸ்காரம் செய்ய, செய்விக்க மகத்தான பலன் உண்டு.

## கன்னியா ராசி

*உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய*

குரு மூன்றிலும், சனி நான்கிலும், ராகு ஜன்மத்திலும், கேது ஏழிலுமிருக்கிறுர்கள். இதனுல் ஆரோக்ய சுகம் குறையும். எதையும் சிரமத்தின்பேரில் முடிப்பார்கள். அதிகாரியால் வருத்தமேற்படும், மன நிம்மதி குறையும். மறைமுகமான எதிர்ப்புகளும். பந்துக்களால் கிலேசமுமுண்டாகும். சிலருக்கு இடம் மாற்றம் அல்லது வெளியூர் போய் வருவதில் செலவு இப்படி ஏற்படும். பிரதி புதன் கிழமையிலும் மஹாவிஷ்ணுவுக்கு அர்ச்சனே செய்ய வேதனே விலகும்.

## துலா ராசி

*சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய*

குரு இரண்டிலும், சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலுமிருக்கிறுர்கள். இதனுல் சிலருக்கு உத்யோகத்தில் உயர்வு ஏற்படும். குடும்ப சௌக்கியம் உண்டாகும். இருப்பிடம் மாறும்படியாகும். சுப முயற்சிகள் கூடும். மேலோர் நேசம் ஏற்படும். செய்தொழிலில் ஆதாயம் கூடும். எதிலும் முன்

---

னேற்றத்திற்குரிய சூழ்நிலைகளேற்பட்டுவரும். நவக்கிரஹ ஹோமம் செய்து வெள்ளி தானம் செய்ய ஸம்பத்துப் பெருகும்.

## விருச்சிக ராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ஜன்மத்திலும், சனி தனத்திலும், ராகு லாபத்திலும், கேது ஐந்திலும் இருக்கிறார்கள். இதனால் அலைச்சல் கார்யங்களிலும், வெளியூர் பிரயாணத்திலும் ஈடுபடும்படியாகும். குடும்ப செலவுகளும், கோபத்தால் காரியக்கேடும் ஏற்படும். தன் சொல் வேதனைக்கு விரோதமாகும். வியாபாரத்தில் தடைகளும், சிலர் பகையும் ஏற்படுவதாகும். சுப்ரமண்யருக்கு அபிஷேகம் செய்ய நன்மை யேற்படும்.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும், சனி ஜன்மத்திலும், ராகு ஜீவனத்திலும், கேது நான்கிலும் இருக்கிறார்கள். இதனால் ஆரோக்கிய வகையில் செலவுகள் உண்டாகும். அலைச்சல் மிகுதியாகும். திருப்தியற்ற வகையில் உத்தியோகம் மாறும். சுப முயற்சிகள் கூடும். வியாபார நடப்பில் திருப்தி குறையும். எதிர்ப்புகள் உண்டாகும். ருத்ராபிஷேகம் செய்து சனிக்கு விளக்கு போட நன்மையாம்.

## மகர ராசி

### உத்ராடம் 2ம்பாதம்முதல் திருவோணம் அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றிலும் இருக்கிறார்கள். இதனால் தேக அசக்தம், வீண்வகையில் செலவுகள், உறவினர் பகையாதல் இவைகள் ஏற்படினும், தொழில் புதிய முறையில் திருந்தும். குடும்ப சுகம் உண்டு. வரவேண்டிய பணம் வசூலாகும். புதிய ஏற்பாடுகள் உண்டாகும். உத்தியோகத்தில் முன்னேற்றமிராது. துர்க்கா ஜபமும், சூரியனுக்கு ப்ரீதியும் செய்ய நலந்தரும்.

## கும்ப ராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம் பூரட். 3-ம் பாதம் முடிய

குரு பத்திலும், சனி லாபத்திலும், ராகு எட்டிலும், கேது தனத்திலுமிருக்கிறார்கள். இதனால் புண்ணிய செலவு ஏற்படும். சுப முயற்சியுண்டாகும். பந்து, சிநேகிதர்களால் சில வருத்தம் ஏற்படும். செய்தொழிலில் சம வருமானமும், சில பொருள் வாங்குவதும் ஏற்படும். சிலருக்கு இருப்பிடம் மாறும்படியாகும். பிரதி சனிதோறும் நவக்கிரஹ பிரதக்ஷிணம் செய்து கோயிலில் விளக்கு போடுவதால் தடைகள் நீங்கும்.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு பாக்கியத்திலும், சனி ஜீவனத்திலும், ராகு ஏழிலும், கேது ஜன்மத்திலும் இருக்கிறார்கள். ஆரோக்ய ஸம்மந்தமாய் சிறிது கவலை. அதிகாரிகளால் சில வருத்தம், குடும்பத்தில் சுகக் குறைவு, சிலர் பகை, பொருள் விற்க யோசனை, சம வருமானம் ஏற்படல், உத்தியோகத்தில் உயர்வுக்குரிய சில மாற்றம் இப்படி ஏற்படும். சிவாஷ்டோத்தர பாராயணமும், அபிஷேகமும் செய்ய நன்மை தரும்.

---

**பிறகு அக்நியுடன் யஜமானன், பத்நீ செல்லவேண்டும்.**

## தார்மிகச் செய்தி.

**பொதுஜன வைத்ய சாலை:** மேல மாம்பலத்தில் சிலர் ஒன்றுகூடி ஏழைகளுக்கு ஸ்வல்ப செலவில் மருந்து, சிகித்ஸை கிடைக்கும்படி ஒருவைத்ய சாலை ஏற்படுத்தி அதற்கு சொந்த கட்டடம் கட்டினர். 19—12—58 வெள்ளிக் கிழமை மாலை அதற்கு விஜயம்செய்து தீபம் ஏற்றிவைக்கும்படி ஸ்ரீ பரமசார்யாளை வேண்ட அங்கு விஜயம்செய்து க்ஞாந தீபம் ஏற்றினார்கள். மிக ரஸமாய்ச் சுருக்கமாக சில உபதேசம் செய்தார்கள். ஆதி தேவ வைத்யர் சிவன். அவர் மநமும் உடலும் குளிர ஸதா அபிஷேகம் செய்கிறோம். அவர் குளிர்ந் தால் உலகெலாம் குளிர்ந்திருக்கும். ஒவ்வொருவரும் அவரவர் கல்விக் கேற்றபடி பொதுஜந ஸேவை நித்யம் ஒரு மணியாவது செய்யவேண்டும். அந்த நேரம் நமது அவலை கஷ்டம் தோன்றாது. நித்யம் அப்படிச்செய்துவந் தால் நாமும் ஒரு வைத்யராவோம். பண்டிதர் இலவசமாக ஸம்ஸ்கிருதம் கற்பிக்கலாம். வைதிகர் புண்யாஹவசநாதிகளையும், தொழில்கலை அறிந்தோர் அதையும் கற்பிக்கலாம். ஒன்றுமறியாதவர் கோவில் மடம் தர்மஸ்தாபநங் களில் பாராவாவது கொடுக்கலாம்.

**நம் ஸமூஹம் கற்குமா?** அன்யரிடமுள்ள பல அநாசாரங்களைக் கற்றோம். 4—12—58 ராமநாதபுரத்திலும் மற்றும் சில இடங்களிலுமுள்ள முஸ்லீம்கள் தங்கள் ஸமூஹப் பெண்களை ஸினிமா செல்வதால் பல துஷ்டச் செயல் தோன்றுவதால் இனி எவரும் போகக்கூடாது. மீறி ஸினிமா செல்வோர் குடும்பத்தை பஹிஷ்கரிப்போம் எனத் தீர்மானித்தனர்! ஸினிமா பார்ப்பதோ டில்லாமல் அதில் நடிக்கவும் செல்கின்றனர் நம்மவர்!

**நமது மதத்திற்கு நற்சாக்ஷி:** கோலாலம்பூர் அருகே கடலில் மூழ்கிய கப்பலைக் கரையேற்ற முயற்சி நடக்கிறது. அதில் மூழ்கி இறந்தவரது ஜீவன் பேயாகி வந்து தங்களுக்கு ஒரு வழி காட்டும்படி கூறுகின்றனவாம். இத்தகைய கதை பல புராணங்களில் உண்டு. அதைப் பொய் எனக் கூறு வோர் இதைக் கவனிப்பாரா?'

**ஜீவ கைங்கர்ய ஸபை:** அநாத ப்ரேத ஸம்ஸ்காரம் செய்ய ஸ்ரீ ஜகத் குரு இதை தோற்றிவைத்தார்.

**ப்ரயோக பாடசாலை ஆண்டுவிழா:** 21—12—58ல் ஸ்ரீ ஜகத்குரு முன்னிலையில் நடந்தது. அதன் கௌரவ கார்யதர்சியான நமது ஆசிரியர் ஆண்டு அறிக்கை படிக்க ஸ்ரீ ஜகத்குரு பூர்ண ஆசீர்வாதம் செய்தார்.

**பதினெண்புராண ப்ரவசநம்:** கிருஷ்ணபுரம் ரமண பக்தஸபையில் பிர்ம்மஸ்ரீ ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா 50 உபன்யாஸங்களில் பூர்த்தி செய் தார். 18வ ஏராளமான பக்தர் கூடி தக்க ஸம்பாவனை செய்தார்கள். வ்யாஸ படம் ஊர்வலம் வந்தது. **T. M.** கிருஷ்ணசாமிஅய்யர், **K. S.** ராமஸ்வாமி சாஸ்த்ரி **N.** பரசுராமன், கல்கி வீழிநாதன், சுதேசமித்ரன் லக்ஷ்மீநரஸிம்மன், இண்டியன் எக்ஸ்ப்ரஸ் **V.** சுப்ரமண்யன் தவே முதலிய பலர் புராணிகரைக் கொண்டாடினார்கள்.

**திருப்பாவை:** 11—1—59 ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி முன்னிலையில் திருப்பாவை எம்பாவை திருமறை ஆறங்க மஹாநாடு ஸ்ரீ மடத் தில் நடந்தது. ஸ்ரீமான்கள் ஸ்ரீவத்ஸ ஸோமதேவசர்மா, கிருஷ்ணமூர்த்தி அய்யர், கி. சந்த்ரசேகரன், ம. போ. சிவக்ஞாநக்ராமணி, சோமு, சிவசுப்ர மண்யம், பட்டுசாமி முதலியவர் பேசினார்கள். ஆசார்யாள் பூர்ண அநுக்ரஹம் செய்தார்கள்.

---

**விதிப்படி உள்ள வீட்டில் லக்ஷ்மி வாசம் செய்வாள்.**

ஆகமப்பகுதி.

# ஹாலாஸ்ய மஹிமை.

(தைமீ தொடர்ச்சி)

## அபிஷேக பாண்டியனுக்கு நவரத்நமளித்தல்.

பகவான் ஒரு ரத்ன வியாபாரிபோல் வழியில் வந்து கூறினர். நீங்கள் வருந்தவேண்டாம். மிக விலை உயர்ந்த ரத்னங்களைத் தருகிறேன். அவை வலன் உடலிலிருந்து உண்டானவை. அவ்வரக்கன் ஶிவனைநாடித் தவம் செய்து தான் விரும்பினலல்லது தனக்கு மரணமில்லை. மரணம் எப்படியாவது வந்தால் தனது எலும்புகளெல்லாம் விலையுயர்ந்த நவரத்நமாகவேண்டுமென வரம் பெற்றான். அவன் அமராதிபனைப் போரில் முறியடித்தான். இந்த்ரன் குருவைக்கலந்து வலனிடம் வந்து வணங்கி உனது வீர்யம் கண்டு மெச்சினேம். வேண்டிய வரம் கேள், தருகிறோம் என்றான். புன்னகை புரிந்து வலன் ஶக்ர! வெற்றிபெற்றவனைப்போல் பேசுகிறாய்! "நீ யார் எனக்கு வரமளிக்க? வெற்றி வீரனை நம்மிடம் நீ கேள், நாம் தருகிறோம் வரம் என்றான் கர்வத்துடன்.

இதே தக்க சமயம் என உணர்ந்து இந்த்ரன் அஸுரேந்த்ர! உன்போன்ற மஹா வீரர் சொன்ன சொல் தவரமாட்டாரன்றோ? நான் ஒரு வேள்வி செய்ய விரும்புகிறேன்! அதற்குத் தாங்கள் பஶு ரூபமெடுத்து உடலை அளித்து அழியாக் கீர்த்தி பெறவேண்டும் என்றான். அங்ஙனமே வலனைக்கொண்டு வேள்வி நடந்தது. ஶிவன் தந்த வரத்தின்படி அவன் எலும்புகள் நவரத்னங்களாயின. அவைகளின் லக்ஷணம், உத்பத்திஸ்தானம், குணம் முதலியவைகளைக் கூறி அந்த ரத்னங்களைக் கொண்டு கிரீடம் முதலியன செய்து அபிஷேகம் செய்யச்சொல்லி மறைந்தார். அதனல் அவன் அபிஷேகப் பாண்டியன் ஆனன்.

## வருணனது வயிற்று வலி நீங்கியது.

வருணன் வினை வலியால் நீங்கா வயிற்று வலிக்கு ஆளானன். தேவ வைத்யரான அஶ்வினியும் அதை அகற்ற முடியவில்லை. தேவேந்த்ரன் மூலமாக ஹாலாஸ்ய நாதன் பெருமையைக் கேட்டான். அங்கு சென்று அவர்

---

**தேவ பூஜை இல்லா வீட்டில் மூதேவியே வஸிக்கும்.**

அருளைப் பெறக் கருதினான். பக்தி செய்து அருள் பெற பல காலமாகும். பகைவனைப்போலிருந்து விரைவில் வியாதியை விலக்கலாம் என எண்ணினான். தன்னிடம் நீரருந்தும் ஏழு மேகங்களையழைத்து மதுரையில் ப்ரளய கால மழைபோல் மழை பொழியுங்கள் என்றான். இடியும் மின்னலும் காற்றும் மழையும் தோன்றி மதுரையை விழுங்கிற்று. அபிஷேகப் பாண்டியனிடம் குடிகள் முறையிட, அவர் தம் குலதெய்வமான மதுரா நாதனை வேண்டினான். பகவான் தனது ஜடாமண்டலத்திலுள்ள மேகங்களை நகரத்திற்கு நாற்புறங்களிலும் மழைநீர் வராவண்ணம் தடுக்கச்சொன்னார். அவை மேலிருந்து மழை வராதபடி தடுத்ததுடன், பூமியில் தேங்கிய நீரையும் வற்றும்படிச் செய்தன. இதைக் கண்டு ஆஶ்சர்யமடைந்த வருணன் பொற்றாமரையில் புனலாடி ஶிவனிடம் செல்ல நினைத்தான்.

தடாகத்தில் முழுகுவதற்குள், அவனது வயிற்றுவலி மாயமாக மறைந்தது. விதிப்படி புனலாடி பகவானை வணங்கித் தனது அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டினான். சிவ மேகங்கள் நான்கும் கூடியதால் நான்மாடக் கூடல் என மதுரை மற்றோர் பெயர் பெற்றது.

## ஸித்தராக வந்து ஸித்தி காட்டல்.

யோகத்தினால் சிலர் அஷ்டமஹா ஸித்தி பெறுவர். செய்ய முடியாதன செய்வர் ஸித்தர்! தமிழகத்தே 18 ஸித்தர் ப்ரஸித்தர். ஸோமஸுந்தரக்கடவுள் ஒரு ஸித்தனைப்போல் வேடந்தாங்கினார். பாகவதர் பாடகர்களைப் போல் ஸித்தருக்குச் சில ப்ரத்யேக சின்னங்களுண்டு. யோக தண்டம் பொன் பிரம்பு சில குளிகை முதலியன தாங்கி ஸித்தனாக வந்தார் பகவான். அவரது ஸித்தியால் கிழவன் குமரனானான். இரும்பு ஸுவர்ணமானது. மலடி மகளை ஈன்றாள். எட்டி தித்தித்தது. ஆண் பெண்ணானது. பெண் ஆணாயிற்று. அருகிலுள்ள அசலம் தூரே சென்றது. தூரத்திலுள்ள மலை அருகே வந்தது. குருடன் கண்பெற்றான். ஊமை பேசினான். மூடன் கவியானான். தென்னை பனமரமாயிற்று. பூனை யானையானது.

---

மற்றும் பலபல அதிசயங்களைக் காட்டினர் ஸித்தர். அவரை அணுகாதவரில்லை. அவரிடம் நன்மை நாடாதவர் இல்லை. மதுரைஎங்கும் ஸித்தரின் திருவிளையாடலைப் பற்றிய பேச்சே. மன்னன் இதைக்கேட்டு மகிழ்ந்தான். ஸித்தரை அழைத்துவர அமைச்சரையனுப்பினன். அரசனால் நமக்கு ஆவதென்ன? வேண்டுமானால் வேந்தன் வரட்டுமென்றார் ஸித்தர். அங்கு செல்வது அரசனுக்கு உசிதமல்ல என எண்ணினன் வேந்தன்.

## கல்லானைக்குக் கரும்பளித்தல்.

ஸித்தர் ஒருநாள் ஆலவாயான் ஆலயஞ் சென்று ஆங்கு அமர்ந்தார். அரசனும் ஆண்டவனை ஸேவிக்க வந்தான். அரசர் நிற்கும் பொழுது அன்னியர் அமர்ந்திருப்பது ஆசாரமல்ல, மரியாதையல்லவென காவலாளி ஸித்தரை எழுந்திரும், இவ்விடத்தை விட்டகலும் என்றான். அவர் அசையாது அமர்ந்திருக்க அபிஷேக பாண்டியன் ஐயா நீர் யார்? உமது ஊர் எது! எதற்காக வந்தீர்? என்ன வேண்டுமென வினவினர். நானொரு ஸித்தன். நாடெல்லாம் நம் ஊரே யாயினும் காஶி நமதிருப்பிடம். தில்லை, மதுரை முதலிய க்ஷேத்ரங் காண வந்தோம். பூர்ண காமனை நாம் எவரிடம் எதையும் வேண்டோம் என்றார் ஸித்தர்.

அதுகாலை ஓங்கி வளர்ந்து மரம்போல் உள்ள ஒரு கரும்பை குடியானவன் உயர்பொருள் வேந்தனுக்கே உரியதென அபிஷேக பாண்டியனிடமளித்தான். அதைக் கரத்திலெடுத்து ஸித்தரே! இதை கல்யானை புஜிக்கும்படி செய்யும். உமது பெருமையைப் பார்க்கலாம் என்றார். ஸித்தர் அதைத் தீண்டியவுடனே கல்யானை கரத்தை நீட்டிக் கரும்பை உண்டது. அரசன் கழுத்திலிருந்த விலையுயர்ந்த முத்து மாலையையும் சேர்த்துத் தின்றது. அனைவரும் ஆஶ்சர்யக்கடலில் அமிழ்ந்தனர். அரசனும் அவரைச்சார்ந்தவரும் சினம் கொண்டு ஸித்தரைத் தாக்க வந்தனர். நில் என்றாரவர். அசைவற்று சித்ரம்போல் நின்றனர் காவலாளிகள். அரசன் ஸித்தரைவணங்கி நீர் மதுரை நாதனே எனப் போற்ற, விழுங்கிய முத்துமாலையைக் கக்கி பாண்டியனுக்கு அளித்தது யானை. ஸித்தரும் மறைந்தார்.

---

**ஆரோக்யம் வேண்டுமா? ஆசாரத்துடனிரு.**

## வில் வீரனுகி வியாழனைக் கொன்றூர்.

அபிஷேக பாண்டியன் தனது மகனுன உக்ரபாண்டியனுக்குப் பட்டம் சூட்டி ஸுந்தரருடன் லயமானுன். ஸோமஸுந்தரர் வம்சத்திற்கேற்க உலகில் உயர்ந்த அரசனென கீர்த்திபெற்றுன். ஸௌர்ய வம்சத்தரசனுன சோழன் காஞ்சியை ஆண்டு வந்தான். அவன் சமண மதத்திலீடுபட்டான். உக்ரபாண்டியனிடம் பொருமை கொண்டு சமணர்களை அழைத்து பாண்டியனைக் கொல்ல ஓர் உபாயம் செய்யுங்கள் என்றுன். எண்ணுயிரம் சமணர் ஒன்றுகூடி ஆபிசாரமெனும் வேள்வி செய்தனர். அதனில் எட்டி விறகு, வேப்பம் எண்ணெய், நெய், விஷ ஜந்துக்களே ஹோம த்ரவ்யம். அந்த யாகத்திலிருந்து மிக பயங்கரமான யானை ஒன்று தோன்றி பாண்டிய நகரத்தையழித்தது. அதை பின் பற்றிச்சமணர் படையெடுத்தார்போல் வந்தனர். விக்ரமன் இதைக் கண்டு ஆராத் துயரமடைந்தான். மதுரா நாதனை வேண்டினுன். அவர் கனவில் தோன்றி தனியே ஒரு பதினுறுகால் மண்டபம் அமை. யான் வில் வீரனுகி வந்து அதைக் கொல்வேன் என்றுர். அங்ஙனமே அரசன் அமைக்க பகவான் ஒரு ஒப்பற்ற வீரனுக வந்து அம்பாலடித்து யானையையும் பின் வந்த சமணர்களையும் கொன்றுர். பாண்டியன் வேண்டியபடி அந்த மண்டபத்தில் அவர் க்ஞானமூர்த்தியாக அமர்ந்தார். அவர் விட்ட அம்பு உக்ர நரசிம்மம் ஆயிற்று.

## கிழவனுகி குமரனுக ஆனுர்.

விரூபாக்ஷன் ஸுபவிருதை என்ற தம்பதிகளுக்கு தேவியின் அருளால் ஒரு பெண் குழந்தை பிறந்தது. கௌரீ எனப் பெயரிட்டு வளர்த்தனர். விவாஹத்திற்கேற்ற வயது வந்தது. வேதமறிந்த நல்ல பிரும்மசாரிக்களிக்க எண்ணினர். தற்செயலாக அவர்கள் வீட்டிற்கு பிக்ஷைக்கு வந்த வைஷ்ணவ பிரும்மசாரியைக் கண்டனர். அவனே சிறந்தவரன்என எண்ணினர். ஆனுல் அவன் சிவ சின்னம் இல்லாதவன். எனினும் அவனது ரூபம், காந்தி, கல்வி, ஒழுக்கம் முதலிய வைகளைக்கண்டு அவனுக்கே கன்னிகாதானம் செய்தனர். வேத விதிப்படி மணம் முடிந்தது.

---

# ஆயுர்வேதம். (5)

வைத்தியப் பகுதி.

டாக்டர், V. K. வெங்கிடசாமி. M. B., B. S., F. I. M.

ஜ்வரம் என்னும் வியாதி தனித்ததாகவோ, மற்ெருரு முக்ய ரோகத்திற்கு குறிகுணமாகவோ, உபத்திரவமாகவோ உண்டாகும். உதாரணமாக பெரியம்மை உண்டாவதற்கு முதல் இரண்டு மூன்று நாள் குறிகுணமாக ஜ்வரந்தான் அதிகமாகக் காயும். பலத்த காயம் படும்போது ஜ்வரம் உபத்திரவமாக வரலாம். இங்கு, நாம் ஜ்வரம் தனியாக ஏற்படும் ரோகத்தையே கவனிப்போம்.

ஜ்வரம் வந்திருப்பதையும், அதன் வேகத்தையும் நிர்ணயிக்க 'கிளினகல் தர்மாமீட்டர்' என்ற நவீனக் கருவியை உபயோகிப்பது நல்லது. இதன்படி முழு எண்ணின்மேல் ° என்ற குறியால் ஜ்வரம் இத்தனை டிகிரி உஷ்ணம் என்பதை தெரிவிக்கப்படும். சாதாரண உஷ்ண நிலை 98·4°. 100°க்குமேல்போனால் ஜ்வரமென்று கட்டாயம் சொல்லலாம். 105° மேற்படில் அபாய ஜ்வரம். சீதளம் அதிகரித்தால் 98° கீழே போகும்.

**ஜ்வர ஸம்பிராப்தி:** ஆஹார விஹார மாறுபாட்டால் ஆமாசயத்திலுள்ள தோஷங்கள் (முக்யமாய் பித்தம்) அங்குள்ள ஜாடராக்னி உஷ்ணத்தை வெளியில் தள்ளி, ரஸதாதுவுடன் கலக்கச்செய்து, தேகமெங்கும் பரவி ஜ்வரத்தை உண்டு பண்ணுகிறது. தற்கால ஆராய்ச்சிபடி ஜ்வரங்களுக்கு மூலகாரணம் டைபாய்ட், டியுபர்கில், நியூமோ காகஸ், மலேரியா முதலிய விஷக்கிருமிகள் அதிக வெயில் உஷ்ணத்தாலும், சில ஓஷதிகளாலும் கூட ஜ்வரம் ஏற்படும்.

**ஜ்வரத்தின் ஸாமான்ய லக்ஷணங்கள்:** வியர்வை வெளிப்படாமை, வெப்பம், அங்கங்களில் வேதனை, பிடிப்பு, அசதி, அமைதியின்மை, தேகவாட்டம், நாக்கில் அருவருப்பு, கண்களில் நீர் ததும்பல், கொட்டாவி, உடல் கனம், மயிர்கூச்சல், சிலசமயம் கடுமையான நடுக்கத்துடன் குளிர் முதலியன.

---

**ஆசார: பரமோ தர்ம: ஆசார: ப்ரதமோ தர்ம:**

**ஜ்வரத்தின் பிரத்தியேக லக்ஷணங்கள்:** அதன்வகைகள்படி வேறுபடும். முக்யமாய், தோஷஜம், ஆகந்துகம், விஷமம், தாதுகதம் என ஜ்வரங்களை நான்கு பிரிவுகளாக வகுக்கலாம். அவற்றில், **தோஷ ஜ்வரங்கள்** ஏழு வகைகள். 1 வாதம், 2 பித்தம், 3 கபம், 4 வாத பித்தம், 5 வாத கபம், 6 பித்த கபம், 7 ஸந்நிபாதம் (மூன்று தோஷங்களும் கலந்தவை) ஆகந்துக ஜ்வரங்கள் ஒன்பது வெளிக்காரணங்களால் உண்டாகும். அவைகள் விஷம், தீக்ஷ்ண மூலிகை, காமம், பயம், துயரம், கோபம், அபிஸாரம், ஸாபம், பூதங்கள் என்பன. **விஷம ஜ்வரங்கள் ஐவகை.** 1 ஸந்ததம், (விடாமல் 7, 12 நாட்கள் காயும்) 2 ஸததம் (தினம் இருமுறை வரும்) 3 அந்யேத்யுஷ்கம் (தினம் ஒருமுறை காணும்) 4 திருதீயகம் (ஒரு நாள் விட்டு மறுநாள் கிளம்பும்) 5 சதுர்த்தகம் (இடையில் இரண்டுநாள் விட்டு உண்டாகும்) **தாதுகத ஜ்வரங்கள்** என்பன, இரஸம் முதல் சுக்லசோணிதம் வரையிலுள்ள ஏழு தாதுக்களும் தனித்தனியே தாக்கப்பட்டு உண்டாவன.

**தனிவகைப்பட்ட ஜ்வரங்களின் லக்ஷணங்களாவன:** **வாத ஜ்வரம்;-** கொட்டாவி, நடுக்கல், ஜ்வரவேகம் ஒழுங்கின்றி அதிகரித்தல், தொண்டையும் உதடும் வறண்டு போதல், நித்ரையின்மை, அவயவங்கள் திமிர்த்து ரூக்ஷமாதல், தலை மார்பு இவற்றில்வேதனை, வாய் அருவருப்பு, மலபந்தம், வயிற்றுப்பொருமலும் வலியும் முதலியன.

**பித்தஜ்வரம்:—** கண்ணழற்சி, அதிவேக ஜ்வரம் சொற்ப நித்ரை, வாந்தி, பேதி, அதிக வியர்வை, வாய் பிதற்றல் வாயில் கடு அல்லது கைப்பு ரஸம், மூர்ச்சை, அதிக அழற்சி, வெறி, மலம் மூத்திரம் நேத்ரம் மஞ்சளாதல், தலைச் சுற்றல் முதலியன.

**கபஜ்வரம்:—** உணவில் அருவருப்பு, உடம்பில் வாட்டம், திமிர், ஸ்தம்பம், பாரம், மந்தஜ்வரம், சோம்பல் வாய் இனிப்பு, கண்-மலமூத்ரம் வெளிறிஇருத்தல், வயிறு நிறம்பிய உணர்ச்சி, தேக உஷ்ணம் அதிகமாக இருத்தல், வாந்தி, குளிர், வாயில் நீர் ஊறல், மயிர் சிலிர்த்தல்,

அதிக நித்திரை, ஆரோசகம், நாசியில் சளி, காஸம் முதலியன.

**த்வந்தவ** (இரு) தோஷ ஸந்நிபாத (முத்தோஷ) ஜ்வரங்களின் குணங்கள் முன் கூறிய தனித்தோஷ ஜ்வரங்களின் லக்ஷணங்களைக்கூட்டி அறியவேண்டும். ஸாதாரணமாய் ஒரு தோஷ இருதோஷ ஜ்வரங்கள் ஒரு வாரத்திற்குள் அடங்கி விடும். ஸந்நிபாத ஜ்வரம் 22 நாட்கள் வரை கூடத் தொடரும். மேலும் இது ப்ரத்யேக அபாயக் குறிகளைக் கொண்டது.

**ஸந்நிபாத ஜ்வரம்:**— உஷ்ணம் ஒருசமயம் ஏறும். சீதளம் அடுத்த க்ஷணம் மேலெழும். அஸ்திகளிலும் ஸந்திகளிலும் தலையிலும் வலி உண்டாகும். செவியில் குத்தலும் ஓசையும் காணும். நாக்கு வறண்டுபோய் சொர சொரப்பாய் இருக்கும். இரத்தமும், கபமும், பித்தமும் எச்சிலில்வரும். எப்பொழுதும் கத்திக்கொண்டு கூவுவான். சர்மத்தில் சிவந்த கரிய தழும்புகளும் படைகளும் தோன்றும். பேசுதல் நின்றுபோய் விடும். இறுதியில் காதுக்குக் கீழே குரூரமானதும் அபாயமானதுமான வீக்கம் காணும்.

**அபிந்யாஸம்** என்ற ஒருவித ஸந்நிபாத ஜ்வரத்தில் மார்பின் ஸ்ரோதஸ்ஸுகளில் ஆமதோஷம் கட்டிவிடும். இதனால் எல்லா இந்த்ரியங்களும் தாக்கப்பட்டு கண், காது, நாசி, ஸ்பர்சம், புத்தி முதலியவைகளின் செயல்கள் மந்தப்படும். படுக்கையில் புரளுவான். கூக்குரலிட்டு துடிப்பான். பேச்சு சொற்பமாகும். பிழைப்பது கஷ்ட சாத்யம்.

தற்கால சாஸ்திரப்படி இந்த தோஷ ஜ்வரங்களின் தன்மையை அறிதல் அவச்யம். பென்ஸிலீன் போன்ற நவீன மருந்துகளால் இது வரையில் சிகித்ஸைக்கு வசப்படாத ஜ்வரங்கள் அடங்கிவிடுகின்றன. எவ்வித குறி குணங்கள் கொண்ட வகைகளுக்கு இவ்வித முறையை கையாளவேண்டுமென்று நாம் உணரவேண்டும். விவரமாயும் ப்ரத்யேகமாயும் செய்யப்படும் சோதனைகளால் தான் வியாதிகள் புதுவழியில் நிர்ணயிக்கப் படுகின்றன.

---

இதற்கு சரியான பயிற்சிப் பெற்ற டாக்டர்களின் உதவி தேவை எனினும் அத்தகைய வியாதிகளின் பொதுவான விஷயங்களைத் தெரிந்திருத்தல் நலம்.

வாதமும் கபமும் மேலிட்ட ஜ்வரம். **இன்புளுயன்ஸா** என்ற வகையைச் சேரும். சில வாத ஜ்வரம் **ருமாடிக் ஜ்வரம்** என்பதின் பூர்வரூபமாக இருக்கலாம். **டெங்கு** என்ற பிரிவையும் சேரும். பித்த ஜ்வரங்களில் பல பெயரின்றி குணப்படுத்தப் படுகின்றன. ஸந்நிபாத ஜ்வரம் **டைபாய்ட், நியுமோனியா, மெனிஞ்ஜைடிஸ்** என்ற வகைகளாக இருக்கலாம். கபஜ்வரம் சுவாஸக்குழாய் களின் அழற்சியாலும் ( **பிரான்கைடிஸ்** ) உண்டாகலாம்.

**தோஷஜ்வரங்களைத் தடுத்துப் போக்கும் முறைகள்:** சாதாரணமாய் எல்லா ஜ்வரங்களிலும் முதல் 2, 3 தினங்களுக்குள்ளாக மிருதுவிரேசநம் செய்விப்பது நல்லது. இதற்கு பேதிஉப்பு (மாகனீஸியம் ஸல்பேட்) $\frac{1}{2}$–1 அவுன்ஸ், 2–4 அவுன்ஸ் வெந்நீரில் காலையில் சாப்பிடலாம். கஞ்சி ஆகாரம் சிறந்தது. வெட்டிவேர், விளாமிச்சவேர் சந்தனத்தூள், பற்பாடகம், கோரைக்கிழங்கு, சுக்கு, சமயிடை-க்வாத சூரணம் (அதிகஸன்னமின்றி பொடி செய்யப்பட்டது ) 2 அவுன்ஸை 32 அவுன்ஸ் ஜலத்துடன் சேர்த்து எட்டில் ஒரு பங்காகக் காய்ச்சி 2 அவு. தினம் இரண்டு தரம் சாப்பிட எல்லாவித ஜ்வரத்திலுண்டாகும் தாகத்திற்குச் சிறந்தது.

### ஔஷத வர்க்கம்.

**திப்பிலி:** - இது திரிகடுகு கணத்தின் மூன்றுவது சரக்கு கடுரஸம் - மதுர வியாசம்-உஷ்ண வீர்யம்-ஸ்னிக்தம்-லகு - அக்னிதீபனம் - விருஷ்யம் ( சுக்ல - சோணித விருத்தி ) ரஸாயனம்-மலசோதகம்-வாதகபஹரம்-ஶ்வாகாஸம், ஜ்வரம், உதரம், குல்மம், மூலம், ஆமவாதம், பிலீக வ்ருத்தி, சூலம், பிரமேகம், குஷ்டம் முதலியவைகளைப் போக்கும்.

(1) திப்பிலி, கடுக்காய் சமபாகம் சூரணம் செய்து தேனில்கலந்து இலந்தங்காய் அளவு காலை மாலை 3மாதம் சாப்பிட க்ஷயரோகம் போகும்.

---

**ஆசாரம் செல்வத்திற்கு ஆணிவேராகும்.**

# விநாயக புராணம்.

ரதி கணேசனது திருவடியில் விழுந்து நமஸ்கரித்தாள். மன்மதனும் அவளுடன் சேர்ந்து விநாயகனைத் துதித்தான். என்ன வரம் வேண்டுமென கணேசன் வினவ ஆதிமுதல் நடந்த கதைகளைக் கூறி தனக்கு முன்போல் உலகத்தவர் கண்ணிலும் படும்படியான உருவம் தந்தருள வேண்டுமென்றான் மன்மதன்.

மஹாவிஷ்ணு த்வாரகையில் கிருஷ்ணனாக அவதரித்திருக்கிறார். ருக்மிணீ எனும் அவரது மனைவியான லக்ஷ்மியிடம் ப்ரத்யும்நன் என்ற பெயருடன் பிறப்பாய், என அருள் புரிந்து மறைந்தார் கணேசர். அங்ஙனமே ப்ரத்யும்நன் பிறக்க ஸம்பரன் எனும் அரக்கன் அச்சிறு குழந்தையைத் தூக்கிச் சென்றான். அவனால் தனக்கு மரணம் என அறிந்து அக்குழந்தையைக் கடலிலே எறிந்துச் சென்றான். அங்கு ஒருமீன் மேலே வந்து வாயைத் திறக்க தெய்வச் செயலால் மீன் வயிற்றில் சென்று வளர்ந்தது. அந்த மீனைப் பிடித்து செம்படவன் மிகப் பெரியதான இது ராஜபாகம் என ஸம்பராஸுரனிடம் அளித்தான். அவன் ரதியைத் தூக்கிவந்து தனது பாகசாலைக்கு தலைவியாக வைத்திருக்க, இம்மீன் அவளிடம் சென்றது. அதன் வயிற்றிலிருந்து யாதொரு தீங்குமின்றி குழந்தையை எடுத்தாள். தனது பதி என உணர்ந்து அவனை வளர்த்து மாயா மந்த்ரங்களை உபதேசித்தாள். அதனால் ப்ரத்யும்நன் ஸம்பரனைக்கொன்று ரதீ தேவியுடன் கூடி புத்ரனைக் காணாமல் வருந்தும் ருக்மிணி இருப்பிடம் வந்தார்.

ரதியும் மன்மதனும் சேர்ந்து மதோத்கடர் என்ற பெயருடன் விநாயகரை ப்ரதிஷ்டைசெய்து பூஜித்தார்கள்.

**ஆதிசேஷன் கணேசபூஜையால் பதவி பெற்றது:** ஒரு ஸமயம் கைலாஸத்தில் பார்வதீ பரமேஸ்வரர்களை ஸகல தேவர்களும் வணங்கி மஹிமையைக் கூறி துதித்தனர். எல்லோருக்கும் மேலான பரமசிவத்தின் ஸிரஸ்ஸின் மீது தானிருப்பதால் ஸிவனையும்விட தான் சிறந்தவன் என எண்ணினான் ஆதிசேஷன். ஸிவஸிரஸ்ஸில் அவனைப் பகவான் ஒரு பூஷணமாக ஏற்கவேண்டுமென கடுந்தவம் புரிந்து அந்த பதவியைப் பெற்றவன் அவன். என் வம்ஸத்தில் உதித்த வாஸுகி கயிறாகி பாற்கடலிலிருந்து

அமிருதத்தை உண்டுபண்ணி அளித்தான். அதை உண்டதாலல்லவோ அமரர் மரணமில்லாதிருக்கின்றனர்! ஆதலால் என்னைவிட உயர்ந்தவர் யார்? என தன்மநதிலேயே கர்வங்கொண்டான். இதையறிந்த ஶிவன் இத்தகையவனுக்கு நம் தலையில் இடமில்லை என அவனை இழுத்து பூமியில் அறைந்தார். நூறு தலைகளும் பத்து பத்தாகச் சிதறின. ஶிவன் மறைந்து விட்டார். அவரைத் தேடி அப்பதவியைப் பெற சேஷன் எங்கும் திரிந்து அலைந்தான். தற்செயலாக வந்த நாரதர் அவன் நிலையைக் கண்டு பரிதபித்து விசாரித்தார்.

எனது கர்வத்தினால் அழிந்தேன். பூமியைச் சுமக்கும் ஶக்தி எனக்கிருந்தது. அதுவும் அகன்று விட்டது. என் தலைகள் பத்து பத்தாகச் சிதறிவிட்டன. அவைகளைச் சுமக்கவும் பேசவும் நடக்கவும் சக்தியற்றவனாகி விட்டேன் என் செய்வேன் என கதறினான். நாரதர் கருணையுடன் அதைக்கேட்டார். எல்லாம்வல்ல விநாயகரது பெருமையைக் கூறி அவரது ஷடக்ஷரீ மந்த்ரத்தை உபதேசித்தார். பூஜை த்யாநம் ஸ்தோத்ரம் முதலியவைகளையும் கூறினார். சேஷன் அதன்படியே பல்லாண்டுகள் பகவானை ஆராதித்தான். கணேஶன் அவன் எதிரில் தோன்றி அவன் கேட்ட எல்லாவரங்களையும் தந்தார். தனது வயிற்றில் அந்த சேஷனைக் கட்டிக்கொண்டார். [ வ்யாள பத்தோதரன் ] என்று கணேஶனுக்கு ஒரு காரணப்பெயர் உண்டாயிற்று. தனது ஐந்து சிரஸ்ஸுகளிலும் அவனைத் தரித்துக்கொண்டார். விஶ்வ ரூபத்தைக் காண்பித்தார். பூமியை சுமக்கவும் நாராயணனுக்கு சயநமாகவும் வரமளித்தார். தன் பெயரால் விநாயகரை ப்ரதிஷ்டை செய்து ஆலயமமைத்தான் சேஷன்.

**கஶ்யபர் ஸந்ததிவளருதல்:** பிரும்மா தனது மாநஸிக புத்ரர்களில் ஒருவரான கஶ்யபருக்கு விநாயகரின் ஏகாக்ஷரீ மந்த்ரத்தை உபதேசித்து உலக ஸ்ருஷ்டியிலீடுபடும்படிக் கூறினார். ஆயிரமாண்டுகள் அவர் தவம் செய்தார். கஶ்யபரது தவத்திற்கு இணங்கி விநாயகர் ப்ரத்யக்ஷமானார். கஶ்யபர் அவரைப் பணிந்து துதித்தார். உனக்கு என்ன வரம்வேண்டும்? என பகவான் வினவினார். உலகைப் படைக்கும் ஶக்தி கணேஶ பக்தி நினைத்தபொழுது தர்ஶநம்

அளித்தல் கணேசரைப்போன்ற புத்ரன் ஆகிய இவைகளைத் தந்தருள வேண்டுமென்ருர். அங்ஙனமே வரமளித்து அவர் மறைந்தார். கச்யபர் தன்னிருப்பிடம் வர பதிநான்கு மனைவிகளும் அவரைத் தக்கபடி உபசரித்தனர். சிலநாட் சென்றபின் அனைவரும் கர்ப்பமாகி தைத்யர் தேவர் கந்தர்வர் சாரணர் யக்ஷர் குஹ்யர் தேநு மலை நதிகள் செடி கொடிகள் தான்யம் ஈ எறும்பு முதலியவைகளை உண்டு பண்ணினுர்கள். கச்யபர் தனது ஸந்ததியைக் கண்டு களித்தார். எவருக்கு எந்த மந்த்ரம் தகுதியானதென யோசித்து பலவகையான கணேச மந்த்ரங்களை அனைவர்க்கும் உபதேசித்தார்.

தந்தை கூறியபடி அனைவரும் ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்தார்கள். அவரவர் த்யாந ச்லோகத்தில் கண்டபடி வெவ்வேறு வகையாக கணேசர் தர்சநமளித்தார். அனைவரும் "ஸதா தம் கணேசம் நமாமோ பஜாம:" என்று எட்டு சுலோகங்களால் துதித்தனர். அவரவருக்கும் வேண்டிய வரந்தந்து இருபத்தோருமுறை இந்த ஸ்துதியை நித்யம் பாராயணம் செய்தால் வேண்டிய பலன் உண்டாகுமென்று கூறி மறைந்தார். அனைவரும் தங்கள் இருப்பிடம் சென்று ஆங்காங்கு பற்பல பெயர்களால் விநாயகரை ஆலயத்தில் ப்ரதிஷ்டை செய்தார்கள்.

[ஸுமுக: ச ஏகதந்த: ச கபிலோ கஜகர்ணக: | லம்போதர: ச விகட: விக்நராஜோ விநாயக: | தூமகேது: கணத்யக்ஷ: பால சந்த்ர: கஜாநந:] வித்யாரம்பம் விவாஹம் க்ரஹப்ரவேசம் வெளிக்கிளம்புவது யுத்தம் ஸங்கடம் முதலிய காலங்களில் இப் பன்னிரண்டு நாமாக்களை ஜபித்தால் ஸகல விக்னங்களும் அகன்று கார்ய ஸித்தி உண்டாகும்.

**உபாஸன கண்டமும் பூர்வார்த்தமும் முற்றிற்று.**

## உத்தரார்த்தம்—லீலா கண்டம்.

மஹா விஷ்ணு ப்ரும்மாவுக்கு உரைக்க அவர் வேத வ்யாஸருக்கு உபதேசிக்க அவர் ப்ருகு மஹர்ஷிக்கு உபதேசித்தார். அவர் ஸோமகாந்த மஹாராஜனுக்குக் கூறியபடி ஸூதபுராணிகர் நைமிசாரண்ய முனிவர்களுக்கு உரைத்தார் இந்த கண்டத்தை.

ஆதி தெய்வமான விநாயகர் யுகந்தோறும் வெவ்வேறு நாம ரூபங்களுடன் விளங்குகிருர். க்ருத யுகத்தில் ஸிம்ம வாஹநத்தில் பத்து கைகளுடன் விநாயகர் என்ற பெயருடன் தேஜோரூபியாக விளங்கினர். த்ரேதா யுகத்தில் மயில் வாஹநத்தில் அமர்ந்து ஆறு கைகளுடன் வெண்ணிறத்தவராய் மயூரேச்வரர் என்ற பெயருடன் விளங்கினர். துவாபர யுகத்தில் மூஷிக வாஹநத்தில் சிவந்த திருமேனியுடன் நான்கு கரங்களுடன் கஜானனன் என்ற பெயருடன் தேவாஸுரர்களால் பூஜிக்கப்பட்டார். கலியில் புகை வர்ணமுள்ளவராய் குதிரை மீதேறி இருகரங்களுடன் தூம்ரகேது என்ற பெயருடன் துஷ்டர்களை வதம் செய்கிருர்.

**தேவாந்தக நராந்தகர்:** அங்கதேசத்தில் ரௌத்ர கேது என்ருேர் வேதியரிருந்தார். ஸகல வேத ஶாஸ்த்ரங்களையும் கற்று பலவேள்விகளைச் செய்துவந்தார். சாரதா என்ற அவரது மனைவி ரூபம் குணம் கல்வி அடக்கம் முதலியவைகளில் பதிக்கேற்ற ஸதியாக விளங்கினள். இருவர்க்கும் இருபுத்ரர்கள் பிறந்தனர். தற்செயலாக நாரதர் அங்கு வந்து விதிப்படி ஜாதகாதிகளைச் செய்துவைத்து இவர்களது செயலையறிந்து தேவாந்தக நராந்தகன் எனப் பெயர் வைத்தார். நாரதர் முக்காலத்தையும் உணர்ந்தவர். மூத்தவன் தேவர்களுக்கு யமன். இளையவன் நரர்க்கு அந்தகன் ஆவான், என மிகப் பொருத்தமாக இப்பெயர்களை வைத்தார். காலத்திலே உபநயநம் செய்து சிவபஞ்சாக்ஷரீ மஹா மந்த்ரத்தை உபதேசித்தார் தந்தை. இருவரும் வநம் சென்று ஏகாந்தமான இடத்தில் அமர்ந்து ஏகாக்ர சித்தர்களாய் ஆயிரமாண்டுகள் பரமசிவனை உபாஸித்தார்கள். பார்வதியுடன் கூட பரமசிவன் அவர்கள் முன்னே தோன்றி வேண்டிய வரத்தைக் கேள் என்ருர்.

தேவாஸுர கந்தர்வர்களாலும் பஶுபக்ஷிகளாலும் இரவிலோ பகலிலோ தங்களுக்கு மரணம் வரக்கூடாது. முவ்வுலகையும் தாங்கள் ஆளவேண்டும் என்ற வரங்களை வேண்டினர்கள். அவர்களது உக்ரதவத்தின் பயனுக அவர்கள் கேட்டபடி வரமளித்து மறைந்தார். இருவர்களும் தந்தையை வணங்கி வரம் பெற்றதைக் கூறினர்கள். அவரது ஆசீர்வாதத்தைப் பெற்று திக்விஜயம்

செய்யப் புறப்பட்டார்கள். நராந்தகனைப் பூமியையும் பாதாளத்தையும் ஜயிக்கும்படி கூறி தேவாந்தகன் மேலே கிளம்பினான். ஸ்வர்க்கம் சென்று உத்யான வநத்தை அழித்தான். இவனது பராக்ரமத்தைக் கண்டு பயந்தோடிய காவலாளிகள் தேவேந்த்ரனிடம் முறையிட்டனர். கோபங்கொண்ட தேவ ராஜன் நால்வகை ஸேனைகளுடன் வந்து நீண்டநாள் அவனுடன் போர்புரிந்தான். இரு ஸேனைகளிலும் வீரவாதம் எழும்பின. ஶரவர்ஷங்கள் கிளம்பின. பலர் கை கால் அறுபட்டு விழுந்தனர். சிலர் உயிர் துறந்தனர். சிலர் புறங்காட்டி ஓடினர். இந்த்ரனது திவ்யாஸ்த்ரங்களெல்லாம் வீணாயின. சிவன் தந்த வரத்தால் தேவாந்தகன் வெற்றி பெற்றான். தேவேந்த்ரன் தோல்வியுற்று ஓடினான். திக்பாலர்களும் திக்குகளில் ஓடி ஒளிந்தனர். ஹிமய மலை குஹையில் அனைவரும் ஒன்று கூடிக் காலங்கழித்தனர்.

தனது வீரனில் ஒருவனைத் தேவேந்த்ர பதவியில் அமர்த்தி ஸத்யலோகம் சென்றான் தேவாந்தகன். சதுர்முகனைப் போருக்கழைத்தான். இவனது வரபலத்தை அறிந்த பிரும்மா தனது லோகத்தை விட்டு தேவர் இருப்பிடம் சேர்ந்தார். அங்கும் ஒரு வீரனை அமர்த்தி தேவாந்தகன் வைகுண்டம் சென்று போர்நாதம் முழங்கினான். ஶிவன் தந்த வரத்தை மதித்து மஹா லக்ஷ்மியுடன் பாற்கடல் சென்றார் பகவான். இனி தான் ஜயிக்க வேண்டியவர் ஒருவருமில்லையென உணர்ந்து அமராவதியில் அமர்ந்து மூவுலகையும் ஆண்டு வந்தான் அவ்வரக்கன்.

நராந்தகனும் பூமியிலுள்ள பூபாலர் அனைவரையும் போரில் முறியடித்துத் தங்களது ஸேனையிலுள்ள தைத்யர்களை ஆங்காங்கு அரசனாக்கினான். தங்களுக்கு எதிரி எவருமில்லை என இருவர்களும் ஒன்று கூடி களித்தனர். மந்திரிகள் மூலம் பாதாளத்திலுள்ளோர் பாக்கி இருக்கின்றனர் என்று கேட்டு இருவரும் கருட உருவம் கொண்டு ஆங்குள்ள பாம்புகளை விழுங்கினர். இதைக் கண்ட ஆதிஶேஷன் ஓடி வந்து பலவகை ரத்னங்களை காணிக்கை அளித்து ஆண்டுதோறும் அங்ஙனம் அளிப்பதாகக் கூறி ஸமாதானம் செய்து கொண்டான். இருவர்களும் சேர்ந்து பதினான்கு

லோகங்களையும் ஆண்டனர். தேவர்களையும் பிராம்மணர் களையும் பீடித்து வந்தனர். மேரு குகையில் தங்கி தேவ ரனைவரும் விநாயகரைத் துதித்து தங்களை ரக்ஷிக்கும்படி வேண்டினர். விநாயகர் அவர்களுக்கு அசரீரி வாக்காகக் கூறினர். தேவர்களே! அஞ்ச வேண்டாம். யான் கச்யப முனிவருக்குப் புத்ரனாகத் தோன்றி தேவாந்தக நராந்தகர் களையும் மற்ற அரக்கர்களையும் கொன்று பூமியின் பாரத்தை அகற்றுகிறேன் என்றார். தேவர்கள் ஆநந்த மடைந்து பகவானது அவதாரத்தை எதிர்பார்த்துக் கொண் டிருந்தனர்.

கச்யபரது மனைவி கர்ப்பிணியாகி ஒன்பதாவது மாதத்தில் ஒருசுபதினத்தில் விநாயகரைக் குழந்தையாகப் பெற்றாள். அவள் தவம் செய்தபோது எந்த ரூபத்துடன் ப்ரத்யக்ஷமானாரோ அதேபோல் அழகிய கர்ணகுண்டல மும் பத்துகரங்களும் நெற்றியில் கஸ்தூரியும் திவ்ய கிரீடமும் ரத்நஹாரமும் அருகில் ஸித்தி புத்திகளும் சூழ திவ்ய மங்கள ரூபத்துடன் தோன்றினர். பெற்றோரது கண்கள் அவரது காந்தியால் ஒளி மழுங்கின. இருவரும் பகவானைத் துதித்தார்கள். சிறு குழந்தையாக இருந்து அழகாக லீலைகளைச் செய்து இன்பமளிக்க வேண்டுமென ப்ரார்த்தித்தார்கள். பகவான் உடனே சிறு குழந்தையாகி க்வா க்வா என அழுதார். அந்த த்வநி மூன்று லோகங்களி லும் பரவிற்று. ஆங்காங்குள்ள தைத்யர்களது மநம் கலங்கிற்று. ஸாதுக்கள் உள்ளம் குளிர்ந்தது.

கச்யபர் உடனே ஜாதகாதி கர்மாக்களைச் செய்தார். மஹோத்கடன் என பெயர் வைத்தார். எண்ணிறந்த தாந ங்களை வழங்கினர். முப்பத்திரண்டு லக்ஷணங்களும் பொருந்திய அத்புதமான இக்குழந்தையைக் காண ரிஷி களும் தேவர்களும் வந்து குவிந்தனர். வஸிஷ்டர் இக் குழந்தை சாதாரணமான தல்ல. ஸாக்ஷாத் விநாயகரே. இங்கு பற்பல அரிஷ்டங்கள் உண்டாகி அகலும். ஜாக்ர தையாக இவரை ரக்ஷிக்க வேண்டும் என்றார். சிலநாட் சென்றபின் விரஜா எனும் பயங்கரமான ராக்ஷஸி கச்ய பரது ஆச்ரமத்திற்கு வந்தாள். சிறு குழந்தையாய் தனி யாய் தூங்கும் விநாயகரைக் கண்டாள். ஆவலுடன் அக்

குழந்தையைத் தூக்கி விழுங்கினுள். தனது பசியைத் தீர்த்துக்கொண்டு தாஹத்தை அகற்ற தண்ணீரும் அருந்தினுள். அதுவரை பேசாமலிருந்த குழந்தை விரஜையின் வயிற்றில் வளர்ந்து அவள்குடலைக்கீறி வீழ்த்தினுர். மலைபோன்ற அவளது உடல்மீது தவிழ்ந்து விளையாடினுர். படுத்துறங்கிய பாலகனைக் காணுமல் அதிதி அலறினுள். கதறினுள். அங்குமிங்கும் அலைந்து தேடினுள். அரக்கியின் உடல்மீது விளையாடும் குழந்தையைக் கண்டு ஆநந்தமடைந்தாள். வாரியெடுத்தணைத்தாள். பல மந்த்ரங்களைக்கூறி ரக்ஷை அளித்தாள். குழந்தை ஆயுள் வளர பலதாநங்கள் செய்தாள் ஸ்வஸ்திவாசநம் கூறினுள். ஒருக்ஷணங்கூட குழந்தையை விட்டுப் பிரிந்திருக்கக்கூடாதென கச்யபர் கூறினுர்.

**உத்தத துந்துரவதம்:** இவ்விரு அரக்கர்களும் மதோத்கடரைக் கொல்ல கிளிவேஷம் பூண்டு அவர் ஆச்ரமத்தில் அமர்ந்தனர். அதைக்கண்ட குழந்தை விளையாடுவதற்கு அதைப் பிடித்துத் தரும்படி தாயை வேண்டினுர். குழந்தாய் ஆகாயத்தில் பறக்கும் பக்ஷியை எப்படிப்பிடிப்பது? மரக்கிளி தருகிறேன். அதைக் கொண்டு விளையாடு, என்றுள் தாய். குழந்தை அது வேண்டாமென தவிழ்ந்துப்போய் அருகில் வந்த கிளிகளை இருகரங்களாலும் பிடித்துக் கொண்டார். அவை ரக்கைகளாலும் மூக்காலும் அவரைக் கொல்ல முயற்சித்தன. குழந்தை அவைகளைப் பூமியில் ஒங்கி அறைந்தார். உடனே அவை உயிரை விட இருவர் உடல்களும் இரு மலைகள்போல் கிடந்தன. இதைக்கண்ட பெற்ருேர் குழந்தையை எடுத்து முன்போல் பலவகை ரக்ஷை செய்தனர். அரக்கர் உடலை வெட்டி காட்டிலெறிந்து தீயிட்டார் கச்யபர். குழந்தையை ஏன் தனியே விட்டாய்? என மனைவியைக் கடிந்து இனி ஜாக்ரதையாகக் கவனித்துக் கொள் என்ருர்.

**சித்ர கந்தர்வ மோக்ஷம்:** மதோத்கடருக்கு நாலுவயதானது. தாயுடன் வ்யதீபாத புண்யகாலத்தில் ஸ்நாநம் செய்ய ஸோமவதீ நதிக்குச் சென்ருர். குழந்தைக்கு ஸ்நாநம் செய்து வைத்து கரை மீதமர்த்தி தாய் ஜலத்தில் இறங்கினுள். மதோத்கடர் விளையாடிக்கொண்டு ஜலத்தில் இறங்கினுர். கரை ஏறு என தாய் கத்திக்கொண்டிருக்கும்

பொழுது ஒரு முதலை அவர் காலைப் பிடித்துக் கொண்டு கழுத்தளவு நீரில் இழுத்துச் சென்றது. அதிதி ஓடி குழந்தையை மீட்கச் சென்றாள். அது அவளையும் சேர்த்திழுத்தது. அவள் கூச்சலிட கச்யபரது ஶிஷ்யர்கள் அனைவரும் ஓடிவந்து மீட்க முயற்சித்தனர். நீரிலுள்ளவரையில் முதலையைக்கொல்ல எவராலும் இயலாது. தனக்காக தாயும் மாணவர்களும் படும் கஷ்டத்தைக்கண்டு மநம் இளகிற்று. காலைத் தூக்கி உதறினார் மதோத்கடர். வெகு தூரத்திற்கப்பால் கரையில் வீழ்ந்தது முதலை. ஒருயோஜனை தூரம் விஶாலமான அந்த உடலிலிருந்து ஒரு கந்தர்வன் கிளம்பினான். மதோத்கடரை வணங்கித் துதித்து சித்ரன் என்ற கந்தர்வ ராஜன் யான். எனது விவாஹ காலத்தில் அங்கு வந்த அனைவரையும் பூஜித்தேன். ப்ருகு முநிவரை மாத்ரம் பூஜியாமல் அலக்ஷ்யம் செய்தேன். அவர் என்னை முதலையாகும்படி சபித்தார். அவரை வணங்கி மன்னித்து ஶாபத்தை அகற்றும்படி வேண்டினேன். தங்கள் திருவடியால் எனக்கு ஶாபமோக்ஷம் என்றார். அங்ஙனமே கந்தர்வ உடல், தங்கள் திருவடியால் கிடைத்ததென விடை பெற்றுச்சென்றான். அதிதி ஆஶ்சர்யத்துடன் குழந்தையை அழைத்துச் சென்று கஶ்யபரிடம் இதைக்கூறினாள். இவர் கஜாநநன் அல்லவா? இதைப்போல் எண்ணிறந்த கார்யங்களைச் செய்யப்போகிறார் என்றார்.

**கந்தர்வர் கண்ட காக்ஷி:** ஹாஹா ஹூஹூ தும்புரு என்ற கந்தர்வர்கள் வீணாகர்நத்தில் கரைகண்டவர். ஒரு ஸமயம் கைலாஸநாதனை ஸேவிக்கக்கிளம்பினார்கள். இடையில் கஶ்யபரது ஆஶ்ரமத்தில் சிறிது நேரம் தங்கினார்கள். முநிவர் அவர்களை நன்கு உபசரித்து விருந்தேற்கும்படி வேண்டினார். அதற்கிசைந்த கந்தர்வர் முறைப்படி நீராடி ஆந்நிகங்களை முடித்து தேவ பூஜை செய்ய அமர்ந்தனர். கண்மூடி மௌநியாய் ஹ்ருதய கமலத்திலே மநதினால் பூஜை செய்து முடித்துப் பின்னர் வெளியில் அர்ச்சிப்பது முறை. அங்ஙனம் அவர்கள் மநதினால் பூஜைசெய்யும் பொழுது தோழர்களுடன் விளையாடச்சென்ற மதோத்கடர் வீட்டிற்கு வந்தார். கந்தர்வர்களைக் கண்டார். அவர்கள் முன்னே வைத்திருந்த ஆதித்யன் அம்பிகை விஷ்ணு கணநாதன் மஹேஶ்வரன் ஆகிய ஐந்து மூர்த்திகளைத் தூரே எறிந்து அக்நி ஹோத்ர ஶாலையில் பதுங்கிக் கொண்டார்.

கண்ணைத் திறந்த கந்தர்வர் மூர்த்திகளைக் காணுமல் கலங்கினர். வருந்தினர். தேவ பூஜையின்றி உண்ணவும் மறுத்தனர். கஶ்யபரை நோக்கி நீர்தான் பொறுப்பாளி. சாந்தமான உமது ஆஶ்ரமத்திலும் திருடர் உண்டோ? என வருந்தினர்.

கஶ்யபர் தமது சிஷயர்களையும் மற்ற சிறுவர்களையும் அதைக் கண்டீர்களா என விசாரித்தார். மதோத்கடன் அவைகளை எடுத்தார் என்று அவர்கள் கூற, தன்மகனே விருந்தினருக்குத் தீங்கிழைத்தானே என்று கோபங் கொண்டார். கரத்தில் பிரம்பை ஏந்தி அவரைத்தேடினுர். அக்நிஶாலையில் நிற்கும் அவரை மிறட்டி எங்கே அந்த மூர்த்திகள் என்றுர். அப்பா நான் ஒன்றையும் அறியேன். நான் அதை விழுங்கியாவிட்டேன், என் வாயைப் பாருங்களென வாயைத் திறந்தார். தந்தையும் மற்றோரும் அவர் வாயில் பதிநான்கு உலகையும் கண்டு ஆஶ்சர்யமடைந்தனர். ஆயினும் கந்தர்வர்கள் தங்கள் மூர்த்திகளைத்தேடித் தரும்படி வேண்டினர்.

அருமைப் புதல்வனை அடிக்கவோ கடிந்து பேசவோ மநமில்லாத கஶ்யபர் அவரைக் கந்தர்வரிடம் நிறுத்தி நீங்களே அவரைச் சிக்ஷித்து மூர்த்திகளைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்றுர். கந்தர்வர்கள் முன், மதோத்கடர் ஐந்து மூர்த்திகளாகவும் ஐந்து தேவதைகளாகவும் தோன்றினுர். மறுபடியும் மதோத்கடரானுர். இதைக்கண்டு ஆஶ்சர்யமடைந்த கந்தர்வர் உண்மையை உணர்ந்தனர். இவரே முழுமுதற் கடவுளென அவர் திருவடியில் பணிந்து துதித்தனர். அவருக்கே அறுசுவை அன்னத்தை நிவேதனம் செய்து மிகுதியை பக்தியுடன் உண்டனர். அவர் அளித்த பஞ்சாயதந மூர்த்திகளை ஏற்றுக் கைலாஸம் சென்றனர்.

## உபநயனமும் பட்டப்பெயரும்.

மதோத்கடருக்கு ஐந்தாமாண்டு பிறந்தது. புத்ரனுக்கு உபநயனம் செய்யக் கருதினுர் தந்தை. சிஷ்யர் மூலமாக ஸகல தேவர்களையும் ரிஷிகளையும் அழைத்தார். ஸர்வேஶ்வரனது உபநயன வைபவத்தைக்காண அனைவரும் திரள் திரளாக வந்து குவிந்தனர். அவரவருக்கேற்ற உபசாரம்

செய்தனர் முனிவர். மங்கள ஸ்நானம் செய்வித்து வேதியிலமர்த்தி வேதியரது வேதோக்த ஆஶீர்வாதத்தை வேண்டினார் கஶ்யபர். **விகாதன், பிங்காக்ஷன், பிங்கலன், சபலன் விஶாலன்** என்றைந்து துஷ்ட ராக்ஷஸர்கள் சுத்த வைதிகரைப்போல விபூதி ருத்ராக்ஷமணிந்து வேதியர் இடையே அமர்ந்தனர். அக்ஷதை, ஆஶீர்வாதம் செய்யும்பொழுது அஸ்த்ரத்தைஎறிந்து மதோத்கடரைக் கொல்வது என்பது அவர்களது எண்ணம். ஸர்வக்ஞன மதோத்கடர், தன் கையிலுள்ள அக்ஷதையை அவர்கள்மீது போட அனைவரும் அரக்கர் உடலுடன் வீழ்ந்து மாண்டனர். அதைக் கண்டு அனைவரும் ஆஶ்சர்யமடைந்தனர்.

அவர்களது உடலை அப்புறப்படுத்தி இடத்தைச் சுத்தம் செய்து விதிப்படி அக்நி வளர்த்து உபநயநம் செய்தார் தந்தை. வஸிஷ்டர் ப்ரும்மசாரியை ப்ரும்மாவினிடம் அழைத்துச் செல்ல அவர் தனது கமண்டலு நீரால் அவரை ப்ரோக்ஷித்து வாடாத மலர்ந்த தாமரையை அவருக்களித்து **ப்ரும்மணஸ்பதி** எனப் பெயர் சூட்டினார். பிருஹஸ்பதி பாரபூதி என்றும் குபேரன் ஸுராநந்தர் என்றும் ஸமுத்திரராஜன் ஸர்வப்ரியர் என்றும் பெயரிட்டனர். பரமஶிவன் சூலம், டமருகம் இவைகளை அளித்து விரூபாக்ஷன் என்றும் அவரே சந்த்ரகலையைத் தந்து பால சந்த்ரன் என்றும் ரேணுகாதேவி பரசுவைத் தந்து பரசு-ஹஸ்தன் எனவும் அவளே ஸிம்மத்தை அளித்து ஸிம்ம வாஹனன் எனவும் பெயர் வைத்தாள். வருணன் முத்து மாலை தந்து மாலாதரன் எனவும், சேஷன் தனது ஆஸனத்தில் பாதி அளித்து பணிராஜாஸனன் என்றும், அக்நி எரிக்கும் ஶக்தியைத் தந்து தனஞ்ஜயன் என்றும், வாயு பலத்தைத் தந்து ப்ரபஞ்ஜனன் என்றும் இங்ஙனம் ஸகல தேவர்களும் அவரவர் ஶக்திக்கேற்ற பொருளைத் தந்து, பட்டப்பெயருமளித்து பூஜித்தனர். இந்த்ரன் மாத்ரம் கர்வத்தால் அவருக்கு ஒன்றுமளிக்கவில்லை. வணங்கவும் இல்லை. தந்தை கஶ்யபர் அவரையழைத்துக் கூறினார். வயதில் சிறியவனாயினும் உயர்ந்த திவ்ய குணமுள்ளவரைப் பூஜிக்கவேண்டும்.

விரஜா, உத்தத, துந்துர முதலிய அரக்கர்களை லீலையாகக் கொன்றவர். தும்புரு முதலிய கந்தர்வர்களுக்குத்

திவ்விய ரூபங் காட்டி மோஹத்தை அகற்றியவர். ப்ராம் மண வேடம் பூண்டு வந்த நான்கு ராக்ஷஸர்களைக் கொன்றார். வஸிஷ்டாதி முநிவர்களால் போற்றப்பட்டவர். ஶிவனால் கொண்டாடப்பட்டவர். நன்மை வேண்டுமானால் அவரைப் பணிந்து பூஜை செய். இந்த்ரன் அவர் மஹிமையை தான் கண்டபின் பூஜிக்கலாம் என்று வாயுவை அழைத்து அவரை ஆகாய மார்க்கமாகத் தூக்கி வா என்றார். அது ப்ரளய கால வாயுபோல் மஹா வேகத்துடன் வீசி மதோத்கடரிடம் வந்தது. அவரது ரோமாவைக்கூட அதனால் அசைக்க முடியவில்லை. வெட்கித் தலை குனிந்து வந்தது. அக்நியை அனுப்பி அவரைக் கொளுத்து. அவரது ஶக்தியைப் பார்ப்போம் என்றார். அக்நியும் உக்ர மான ஜ்வாலையுடன் அவர் அருகே சென்றார். மதோத்கடர் அதன் வேகத்தை அடக்கி அரை க்ஷணத்தில் அதை விழுங்கிவிட்டார். தேவராஜன் மதோத்கடரை உற்றுப் பார்க்க அவர் என்ணிறந்த தலை கை கால் கண்களுடன் மிக உக்ர ரூபராகக் காணப்பட்டார். அவர் உடலிலே அநேக கோடி ப்ரும்மாண்டங்களைக் கண்டார். அடிமுதல் நுனிவரை காய்த்து நிற்கும் அத்திமரம் போல் அவர் உடலெல்லாம் அண்டங்கள் நிறைந்திருந்தன. அவரைப் பணிந்து துதித்து தனது அபசாரத்தை மன்னிக்கும்படி வேண்டினார். அங்குஶம், கல்பவிருக்ஷம் இவைகளைக் காணிக்கையாகத்தந்தார். ஸித்தி விநாயகர் எனப் பெயரிட்டுப் பூஜித்தார். உக்ர ரூபத்தை அடக்கி ஸ்வபாவ ரூபத்தைக் காட்டும்படி வேண்டினார். அங்ஙனமே பகவான் ஶாந்த ரூபியானார்.

### காசிராஜன் மதோத்கடரை அழைத்துச் செல்லல்.

மதோத்கடருக்கு வயது ஏழு ஆனது. காசிதேசத்து அரசன் கஶ்யப முநிவரிடம் வந்து தனது புத்ரனது விவாஹத்தை நடத்திவைக்க வேண்டும் என ப்ரார்த்தித்தார். நான் சாதுர்மாஸ்ய வ்ரதத்தை அனுஷ்டிப்பதால் வருவதற்கில்லை. எனது புத்ரனை அழைத்துச்செல் என்றாரவர். வயதில் சிறியவனாயினும் கல்வியில் பெரியவன் என அவருடன் கிளம்பினான் மன்னன். பெற்றோரைப்பணிந்து இவர் கிளம்பும்போது, அதிதி அரசனை நோக்கி அருந்தவத்தால் உண்டானவன். அடிக்கடி பல அரிஷ்டங்கள்

உண்டாகின்றன. ஆதலால் மிக ஜாக்ரதையாகக் குழந்தையைக் காப்பாற்றி என்னிடம் சேர் என்ருள். அரசனும் ரிஷிகுமாரரும் புறப்பட்டனர்.

## தூம்ராக்ஷ வதம்.

ரௌத்ரகேது என்பவரின் ஸகோதரன் தூம்ராக்ஷன். அவன் பல்லாண்டுகளாக மரத்தின் கிளையில் கால்களைத் தொங்கவிட்டுக்கொண்டு புகையையே ஆஹாரமாகக் கொண்டு ஸூர்யனை நாடித் தவம்செய்தான். கருணை கொண்ட பாநு தேஜோமயமான ஒரு திவ்யாஸ்த்ரத்தை அவனுக்காக அனுப்பினுர். அது மிக்க வீர்யமுள்ளது. பகைவனைக் கொல்லாமல் திரும்பாது. அதைக் கண்ட மதோத்கடர் ஆகாயத்தில் தாவி அதைக் கையால் பிடித்து தூம்ராக்ஷன்மீதே எறிந்தார். உடனே அவன் அவனியில் வீழ்ந்து இறந்தான். இதைக் கண்டு ஆஸ்சர்யங்கொண்ட அரசன் குழந்தையைப் போற்றி புகழ்ந்தான். தூம்ராக்ஷனது குமாரர்களான ஜகனன், மநு என்பவர் கோபங் கொண்டு அரசனிடம் வந்தார்கள். அரசே! நரகாந்தகனிடமிருந்து உன்னைக் காப்பாற்றினுர் எனது தந்தை. அவரை இச்சிறுவனைக்கொண்டு நீ கொன்றது நியாயமா? என்று விரட்டினுர்கள்.

காசிராஜன் நடுநடுங்கினுன். அறியாமல் இவனை அழைத்துவந்தோமே! நராந்தகன் இதைக் கேட்டு நமது ராஜ்யத்தைப் பிடுங்கிக்கொண்டு நம்மையும் ஶிக்ஷிப்பானே என்று எண்ணி, ஐயா! ஸத்யமாக உங்கள் பிதாவைக் கொல்வதற்காக நான் இச்சிறுவனை அழைத்து வரவில்லை. என் புத்ரனது விவாஹத்தை நடத்திவைக்க புரோஹிதராகவே அழைத்துச் செல்கிறேன். வேண்டுமாளுல் இவனை நீங்கள் அழைத்துச் செல்லுங்கள். எனது புத்ரன் விவாஹத்திற்கு விக்நம் செய்யாதீர்கள். என வேண்டினுன். இதைக் கேட்ட மதோத்கடர், அரசே! எனது பெற்ருேரிடம் என்னைக் காப்பாற்றி வீடுகொண்டு சேர்ப்பதாகக் கூறி இப்பொழுது அஸுரனிடம் என்னைக் காட்டிக்கொடுக்கிறீர்களே இது தர்மமா? நியாயமா? பிதா கோபங்கொண்டால் உன்னை சாம்பலாக்குவார் என்ருர். இதற்குள்ளாக இரு அரக்கர்களும் ரிஷி குமாரரை

விழுங்க அருகில் ஓடிவந்தனர். வாயைத் திறந்து ஓர் சப்தம் செய்தார் மதோத்கடர். அதனல் இருவர்களும் நராந்தக நகரத்தில் தூக்கி எரியப்பட்டனர்.

பிணம்போல் விழுந்த இவர்களைக் கண்டு தூதர் நராந்தகனிடம் நடந்த ஸமாசாரத்தைக் கூறினர். பரம கோபங்கொண்டு அச்சிறுவனுடன் காசிராஜனைக் கட்டி இழுத்து வா என-ஆயிரக் கணக்கான ராக்ஷஸ வீரர்களை அனுப்பினன். அவர்களைக்கண்டு விநாயகர் பயங்கரமாக ஓர் ஶப்தம் செய்தார். அதனல் பலர் இறந்தனர். பலரது கைகால்கள் முறிந்தன. சிலர் பயந்து ஓடினர். உயிர் தப்பிய சிலர் நராந்தகனிடம் சென்று கணேஶரது வீர்யத்தைப் புகழ்ந்து கூறி அவருக்கு ஈடு எவருமில்லை என்றனர்கள். நம்மிடமோ அச்சிறுவன் பெருமையைக் கூறுகிறீர்கள்? நாம் மேரு மலை. அவன் சுண்டெலி. அதிருக்கட்டும். மஹா வீரர்களான சிலர் காசிராஜ்யம் சென்று நாட்டை அழித்துக் கொள்ளையிடுங்கள் என்று கூறி அவர்களுக்கு அபரிமிதமான ரத்னங்களை அளித்தான். எவர் கண்ணில் பட்டாலும் அச்சிறுவனைக் கொல்லவேண்டும். இல்லையேல் உங்களைக் கொல்வேன் என்றன். தைத்யர் பலர் பத்து திக்குகளிலும் பறந்து சென்று பலவகை மாயைகளால் அவரை கொல்லச் சென்றனர்.

காசிராஜன் மதோத்கடருடன் தனது நகரம் வந்தான். கொடிகளாலும் தோரணங்களாலும் நகரம் அலங்கரிக்கப் பட்டிருந்தது. பட்டணத்து ஜனங்களும், வேதியர்களும், ஸ்த்ரீகளும்சேர்ந்து அரசனுடன் விநாயகரை வரவேற்றனர். அவரது தேஜஸ்ஸைக் கண்டு ஆஶ்சர்யப்பட்டனர். பெண்களெல்லோரும் தம்தம் வேலையை விட்டுவிட்டு வீதியில் ஓடிவந்து விநாயகரைத்தர்சித்தனர். வெளியே செல்லாதே என புருஷனல் தடுக்கப்பட்ட ஒருவள் மநதினல் விநாயகரை த்யானம்செய்து உடலை விட்டாள். அவளுக்கு முக்தி தந்தார் விநாயகர். ஒவ்வொருவரும் தத்தம் பரிபாகத்திற்கேற்றபடி பகவானை ஸகுணனகவும் நிர்குணனகவும் எண்ணி பூஜித்தார்கள். **விகடன், தந்துரன்** என்ற இரு அரக்கர்கள் சிறுவர் வேஷம் பூண்டு விநாயகரை தர்சிக்க வரும் பாலர்களுடன் சேர்ந்து வந்தனர். விநாயகரை ஆலிங்கனம்செய்து அப்படியே அவரைக் கொல்லக்

கருதினார்கள். ஸர்வக்ஞனான விநாயகர் தானே அவர்களைத் தழுவிக் கொன்றார்.

பயங்கரமான ராக்ஷஸ ஶரீரத்துடன் வீழ்ந்திறந்த இவர்களைக் கண்டு எல்லோரும் ஆஶ்சர்யப்பட்டனர். இந்த்ரனாலும் கொல்ல முடியாத இவர்களை இவன் எப்படி அறிந்தான்? எப்படிக் கொன்றான்? இவன் தெய்வப் பிறவியேயாம் எனப் பலர் போற்றினர். தேவர்கள் புஷ்பமாரிப் பொழிந்தனர். இவர் ஸாதாரண மநிதரல்ல? மாயா மாநுட ரூபீ! எனக் கொண்டாடினர். ராஜ வீதியில் தேர் சென்றுகொண்டிருக்கும்பொழுது **பதங்கன், விதுலன்** என்ற அரக்கர் புயற்காற்றைக் கிளப்பி இவரைக் கொல்ல முயற்சித்தனர். கடுமையான புயற் காற்றால் மரங்கள் முறிந்து விழுந்தன. நடமாடும் மநிதரும் காற்றிலடிபட்டு விழுந்தனர். பகவான் செல்லும் தேரும் மேலே கிளம்ப ஆரம்பித்தது. விநாயகர் அதை அசையாதபடி செய்து அவர்கள் மயிரைப் பிடித்து இழுத்து கன்னத்தில் ஓங்கி அறைந்தார். இருவரும் இறக்க காசி ராஜன் மிக ஆஶ்சர்யங்கொண்டான். ப்ரும்மாதி தேவர்க்கும் எட்டாத பரம்பொருள். என் புண்ணியத்தால் கண் முன்னே நரவுருவில் தோன்றுகின்றது! எனப்புகழ்ந்தான் காலில் விழுந்தான்.

அரசனது அரண்மனைக்குள்ளே நுழைந்தார் பகவான். ஆங்குள்ள கல்லில் ஓர் அஸுரன் புகுந்து இருந்து காலை வைத்தவுடன் அவரைக் கொல்லக் கருதினான். ஸர்வக்ஞனான கணநாதன் தனது பரசுவினால் அதை ஓரடி அடிக்க அக்கல் தூள்தூளானது. அதிலிருந்து கிளம்பிய பயங்கரமான அஸுரனைக் கண்ட அனைவரும் பயந்தோடினர். விநாயகர் கையினால் அடித்து அவனையும் கொன்றார். [அக்கல்மீது தேங்காய்களை உடைக்கச்செய்து அக்கல் சிதறி விழும்படிச் செய்தார். அதுமுதல் தேங்காய் சிதறு காயாக உடைப்பதுண்டு, என ஒருபாடமுண்டு.] அரசன் விநாயகரை ரத்ந ஸிம்மாஸனத்தில் அமர்த்தி ஷோடஶ உபசார பூஜை செய்தார். மாலை அநுஷ்டானம் ஆஹாரம் ஆனபின் குழந்தையை ஹம்ஸ தூலிகா ஶயனத்தில் படுக்கவைத்தார்.

மறுநாள் காலையில் எழுந்து வேதிய பிரும்மசாரிக் கேற்றபடி ஸந்த்யா ஸமிதாதானம் முதலிய கர்மாக்களைச் செய்து முடித்து சிறுவர்களுடன் விளையாட ஆரம்பித்தார். தர்மதத்தர் என்ற ப்ராம்மணோத்தமர் அரசனது அரண்மனைக்கு வர, வேந்தன் விதிப்படி அவரைப் பூஜித்து வந்த வேலையை வினவினர். கச்யபர் எனது நண்பர். அவரது புத்ரன் மஹோத்கடன், தைவிக சக்திவாய்ந்தவன். தங்கள் அரண்மனைக்கு வந்திருக்கிறன் எனக் கேள்விப்பட்டேன். அவனை என் வீட்டிற்கு அழைத்துச் செல்லலாம் என வந்தேன் என்றார். இப்படிக் கூறிக்கொண்டிருக்கும் பொழுதே சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்த விநாயகர் ஓடிவந்தார். அரசன் உத்தரவு பெற்று இருவரும் கிளம்பினர். இடையில் காமன், க்ரோதன் என்ற அரக்கர்கள் கழுதை ரூபம் எடுத்து ஒருவரோடொருவர் சண்டையிடும் வியாஜமாக விநாயகர்மீது விழுந்து அவரைக் கொல்ல முயற்சித்தனர். இதையறிந்த பகவான் இருவர்களையும் காலைப் பிடித்து மேலே தூக்கி பூமியில் அறைந்துக் கொன்றார்.

மற்றோர் அஸுரன் மதயானை உருவங்கொண்டு வீதியில் வரும் அனைவரையும் அடித்துக் கொன்று அரசனது யானை சாலையில் நுழைந்தான். ஆங்குள்ள யானை குதிரைகளையும் கொன்றான். இதைக்கண்ட விநாயகர் அங்கு ஓடினர். தர்மதத்தர் தடுத்தும் கேளாமல் அந்த யானையின்மீதேறி கையிலுள்ள அங்குசத்தால் அதைக் குத்திக் கொன்றார். தர்மதத்தர் இச்சிறுவனுடன் தன் வீடு வந்து ஸ்நானபானங்களைச் செய்து சிறுவனை ப்ரத்யக்ஷ தேவர் எனப் பூஜித்தார். விநாயகர் ஸித்தி புத்தி என்ற மனைவிகளுடனும், ஹரிஹர ப்ரம்மாதி தேவர்கள் சூழ திவ்ய தர்சனம் தந்தார். இவரைத் தர்சிக்க ஊரிலுள்ள ஆண் பெண் அனைவரும் வந்து சூழ்ந்தனர். தூம்ராக்ஷன் என்ற ராக்ஷஸனது மனைவியான ஜ்ரும்பா வேதிய ஸ்த்ரீபோல் வேஷந்தரித்து விநாயகருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து வந்தாள். சிலஸமயம் கைகால்களைப் பிடிப்பாள். ஒரு நாள் குழந்தைக்கு எண்ணெய் தேய்ப்பதாகக் கூறி விஷம் கலந்த எண்ணெயை குழந்தையின் காலில் தேய்த்தாள். கால் எரிய ஆரம்பித்தவுடன் இவள் யார்? என உணர்ந்து பகவான் அருகிலுள்ள தேங்காயால் அவள்

மண்டையில் அடித்துக் கொன்ருர். அரக்கியின் பயங்கர உடலைக்கண்டு அனைவரும் ஆச்சர்யமடைந்தனர்.

காசிராஜன் அங்கு வந்து அவரைத் தன் அரண்மனைக்கு அழைத்துச் சென்ருன். வழியில் விநாயகர் ஸிம்ம வாஹனத்தில் ஸித்தி புத்திகளுடன் தேவர் படை சூழ வேந்தனுக்கு திவ்ய தர்சனம் தந்தார். இங்ஙனம் ஸ்ரீ விநாயகரது பால சரிதத்தைக் கேட்டவர்களது பாபமகலும். ஸகல ஸம்பத்துகளும் உண்டாகும்.

காசிராஜன் மந்திரிகளை அழைத்துத் தன் புத்ரனது விவாஹத்திற்கு வேண்டிய ஸகல ஏற்பாடுகளையும் செய்யும்படிக் கூறினர். ராஜன்! மதோத்கடர் நம் நகரில் உள்ளவரை பல அரிஷ்டங்கள் தோன்றும்! விவாஹத்திற்கும் சில தீங்குகள் தோன்றலாம். ஆதலால் சில மாதங்கள் சென்றபின் விவாஹம் நடத்தலாம் என்றனர் அமாத்யர். ஜ்வாலாமுகன், வ்யாக்ரமுகன், தாருணன் என்ற மூன்று அரக்கர்களும் தங்கள் வகுப்பைக் கொன்ற விநாயகருக்கும், காசிராஜனுக்கும் தீங்கிழைக்கக் கருதினர். அனைவரும் தூங்கும்பொழுது அர்த்த ராத்ரியில் ஜ்வாலாமுகன் நகரமெல்லாம் பற்றி எரியும்படிச் செய்தான். வ்யாக்ரமுகன் பெரிய வாயைத் திறந்து தீயிக்குப் பயந்து குகைபோன்ற தனது வாயில் புகுந்த அனைவரையும் விநாயகருடன் பக்ஷிக்கத் தயாராக இருந்தான். தாருணன் பெருங் காற்ருகி அக்நி ஜ்வாலை எல்லா விடங்களிலும் பரவும்படிச் செய்தான். இருள் சூழ்ந்த இரவில் எங்கும் ஒரே அக்நி ஜ்வாலை! தூக்கக்கலக்கத்தில் என்ன செய்வதென்று அறியாமல் அவரவர் தன்னைக் காத்துக் கொள்ள கனவேகமாக ஓடினர். எங்கும் தீ கொளுத்தியது. என்செய்வர். வ்யாக்ரமுகனது வாய் ஒன்றுதான் விஶாலமான தீயில்லா இடம். எல்லோரும் அதில் சரண் புகுந்தனர்.

அரசன் கூக்குரலைக் கேட்டெழுந்தான். அருகிலுள்ள குழந்தையை எடுத்துக்கொண்டான். மனைவியை அழைத்துக்கொண்டான். தீயில்லா இடம் நாடி ஓடினன். ஆனல் விநாயகரை மறந்துவிட்டோமே! என்செய்வோம்? தீயில் சிக்கி அவர் இறந்தால் குருவிற்கு என்ன பதில் கூறுவது? என எண்ணிஅவனும் வ்யாக்ரமுகனது வாயில் புகுந்தான்

